# எத்தனை மனோரம்யமான நறுமணம்...




# கலிபோர்னியன் பாப்பி பர்பியூம்

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

---

CPP. 4-X28 TM இராஸ்மிக் கம்., லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

# கல்கி பொருளடக்கம்


மலர் 13 | 1954 மார்ச் 28 | விஜய௵
இதழ் 35 | | பங்குனி 15




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

மங்கையர் குலம் தாய்மையின்

வெற்றி கண்டு பூரிக்கிறது!

மாணவர் படை புதிய தமிழ்த்தேன்

அருந்திப் புகழ் பாடுகிறது!!

★ பல் கலைப் புலவர்கள்

★ பாட்டாளித் தோழர்கள்

★ பத்திரிகை நண்பர்கள்

அனைவருமே

★ பாராட்டுகளைக்

★ குவிக்கின்றனர்!!!

"வெற்றியெட்டுத் திக்குமெட்ட கொட்டு முரசே"..... என

திக்விஜயம் செய்கிறது!



மனோகர் பிக்சர்ஸ்

# மனோகரா

திரைக்கதை...வசனம்:
கலைஞர்
மு. கருணாநிதி

RIGHTS CONTROLLED BY
ராதாகிருஷ்ண பிலிம்ஸ் லிமிடெட்
...ஆலப்புழை...

Balan




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 35

# அரசியல் பூகம்பம்!

இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் பல இடங்களில் இந்த வாரத் தொடக்கத்தில் பூகம்பம் ஒன்று நிகழ்ந்தது. அதனால் அதிக சேதங்கள் ஏற்பட வில்லை என்று அறிந்து ஓரளவு ஆறுதல் பெற்றோம்.

ஆனால் அதே பிரதேசத்தில் உள்ள கிழக்கு வங்காளத்தில் ஏற்பட்ட அரசியல் பூகம்பமோ, மிக விபரீதமான விளைவுகளுக்குக் காரணமாக அமைந்தது.

அந்தப் பூகம்பத்தினால் ஏற்பட்ட பெரும் பிளவானது, எத்தனையோ முஸ்லிம் பிரமுகர்கள் பாடுபட்டு வளர்த்த முஸ்லிம் லீக் என்னும் மகத்தான ஸ்தாபனத்தையே விழுங்கி விட்டது.

அந்தப் பூகம்பத்துடனே சேர்ந்து வந்த அரசியல் சூறாவளியானது பெரிய பெரிய முஸ்லிம்லீக் தலைவர்களாகிய நெடு மரங்களை யெல்லாம் வேரோடு பறித்து வீழ்த்திவிட்டது.

கிழக்கு வங்காளத்தில் இப்போது நடந்த தேர்தலில் முஸ்லிம் லீகர்கள் அடைந்த தோல்வியைப் போல் இதற்கு முன்னால் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை.

ஜனநாயக முறையை அடிப்படையாகக் கொண்ட நாடுகளிலே அதிகாரத்தில் உள்ள கட்சி சில சமயம் தோல்வி அடைவதும், எதிர்க் கட்சி வெற்றி பெற்று அதிகாரப் பீடத்தில் ஏறுவதும் சகஜம்தான்.

இருந்தாலும், கிழக்கு வங்காளத்தில் சர்க்கார் கட்சியான முஸ்லிம் லீக் அடைந்த படு தோல்வியைப் போல் இதற்கு முன் எக்காலத்திலும் எந்த நாட்டிலும் ஏற்பட்டதில்லை.

தொண்ணூறு சத விகிதத்துக்கு மேல் முஸ்லிம் லீகர்கள் படுதோல்வி அடைய நேர்ந்ததை ஜனநாயக அரசியலிலேயே கண்டிராத அரசியல் விபரீதம் என்றே சொல்லலாம்.

கிழக்குப் பாகிஸ்தான் முஸ்லிம் லீக் தலைவரும் கிழக்கு வங்காளப் பிரதம மந்திரியுமான ஜனாப் நூருல் அமீன் உள்படப் பெரும்பாலான மந்திரிகளும் தலைவர்களும் முறியடிக்கப்பட்டனர். அவர்களில் பலர் ஜாமீன் தொகையை இழக்கும்படியான படுதோல்வி அடைந்தனர்.

பாகிஸ்தான் பிரதம மந்திரி ஜனாப் முகமது அலி, ஜனாப் ஜின்னாவின் சகோதரி முதலிய பலரும் கிழக்கு வங்காளத்துக்குச் சென்று செய்த பிரசாரம் எல்லாம் பயனற்றுப் போய் விட்டது.

முஸ்லிம் லீகை எதிர்த்து ஜனாப் ஏ. கே. பஸ்லுல் ஹக் தலைமையில் அமைக்கப்பட்ட ஐக்கிய முன்னணிக் கட்சியினர் பெருவாரியான ஸ்தானங்கள் பெற்று மகத்தான வெற்றி அடைந்திருக்கிறார்கள்.

கிழக்கு வங்காளத்தின் புதிய அரசாங்கத்தை அவர்களே அமைக்கப் போகிறார்கள்.

• • • •

அமெரிக்கா - பாகிஸ்தான் இராணுவ ஒப்பந்தம் இந்தியாவின் சுதந்திரத்துக்கு மாத்திரமல்ல, பாகிஸ்தானின் சுதந்திரத்துக்கும் குந்தகம் விளைவிக்கும் என்று நேருஜி கூறினார் அல்லவா?

அவரது வார்த்தைகளுக்கு 'இப்போது பாகிஸ்தான் மக்களே முத்திரை வைத்துள்ளனர்; மோசமான மேற்படி ஒப்பந்தத்துக்கு முதல் அடி கொடுத்துள்ளனர்.

மதத் துவேஷத்தை அடிப்படையாகக் கொண்ட பாகிஸ்தான் சர்க்காரின் முறைகளைத் தாங்கள் ஆதரிக்க வில்லை என்பதைக் கிழக்குப் பாகிஸ்தான் மக்கள் சந்தேகத்துக்கு இடமின்றி வெளியிட்டிருக்கிறார்கள்.

அருமைத் தலைவரான எல்லை காந்தி கான் அப்துல் கபார்கானை ஆறு வருஷ காலம் சிறையில் வைத்து இன்னல்களுக்கு உள்ளாக்கிய கொடுமைக்குப் பாகிஸ்தான் மக்களில் பெரும்பாலோர் சரியான பதில் கொடுத்து விட்டார்கள்.

பாகிஸ்தானில் பெரும் பான்மையோராக இருக்கும் வங்காளிகளின் தாய் மொழியை அலட்சியம் செய்து, அவர்கள் தலையில் உருது பாஷையைத் திணிக்க முற்பட்ட மத்திய பாகிஸ்தான் சர்க்காருக்குக் கிழக்கு வங்காளத்து முஸ்லிம்கள் பாடம் கற்பித்து விட்டார்கள்.

மொத்தத்தில், பாகிஸ்தான் சர்க்கார் அனுஷ்டித்து வரும் முக்கியமான கொள்கைகள் அனைத்தும் படுமோசமானவை என்று கிழக்குப் பாகிஸ்தான் மக்கள் தீர்ப்புக் கூறி விட்டார்கள்.

பாகிஸ்தானின் ஜனத்தொகையில் ஐம்பத்தாறு சத விகிதம் பேர் கிழக்கு வங்காளத்தில் இருப்பதால், பாகிஸ்தான் மக்களில் பெரும்பாலோர் முஸ்லிம் லீக் சர்க்கார் ஆட்சி முறைகளை ஆதரிக்கவில்லை என்று ஏற்பட்டு விட்டது.

முஸ்லிம் லீகின் மாபெரும் தலைவரும் பாகிஸ்தானின் சிருஷ்டி கர்த்தாவுமான ஜனாப் ஜின்னாவின் ஆவி, கிழக்குப் பாகிஸ்தான் மக்களின் தீர்ப்பை அறிந்தால், என்ன பாடு படுமோ, தெரியவில்லை.

தவிர, எழுபத்தைந்து அங்கத்தினர்கள் கொண்ட பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையில் நாற்பது பேருக்கு மேல் கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

எனவே, கிழக்கு வங்காளத்தில் முஸ்லிம் லீகர்கள் தோல்வி அடைந்து விட்டதால், அரசியல் நிர்ணய சபையில் உள்ள முஸ்லிம் லீகர்கள் ராஜினாமா செய்வதே அரசியல் நேர்மையாகும்.

"கிழக்குப் பாகிஸ்தானின் தேர்தல் முடிவு அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினரைப் பாதியாது" என்கிறார் பாகிஸ்தான் பிரதமர்.

அரசியல் நிர்ணய சபைக்குப் புதிய அங்கத்தினரைத் தேர்ந்தெடுத்தே தீரவேண்டியிருக்கும். இல்லாவிட்டால், மேற்படி அரசியல் நிர்ணய சபை நிர்மாணிக்கும் அரசியல் அமைப்பை ஒப்புக்கொள்ள முடியாது என்று கிழக்குப் பாகிஸ்தான் மக்கள் பெரும் போராட்டம் தொடங்கக்கூடும்.

இவ்வாறு பல விதங்களில் கிழக்குப் பாகிஸ்தான் தேர்தல் முடிவுகள் பாகிஸ்தான் தலைவர்களுக்குச் சோதனைகளை உண்டாக்கியிருக்கின்றன.

# பூகம்பப் படிப்பினைகள்

கிழக்கு வங்காளத் தேர்தல் முடிவுகளிலிருந்து சுதந்திர இந்தியாவிலுள்ள நாம் அறிந்து கொள்ள வேண்டிய சில படிப்பினைகளும் வெளியாகியிருக்கின்றன. அந்த உண்மைகள் உலகத்துக்கே பயன்படக் கூடியவை.

1. பொது மக்களின் விருப்பத்தை அரசியலில் நிறைவேற்றிக் கொள்வதற்கு வோட்டுப் பெட்டியைப் போல் சிறந்த சாதனம் வேறு கிடையாது என்பது ஒரு முக்கியமான படிப்பினை.

இப்போது கிழக்குப் பாகிஸ்தானில் நிகழ்ந்திருக்கும் அரசாங்க மாறுதலை ஒரு பெரும் அரசியல் புரட்சி என்றே சொல்லலாம்.

ஆனால் இதே புரட்சியைப் பலாத்கார முறைகளினால் கொண்டு வந்திருந்தால், எத்தனை பேர் மாண்டிருப்பார்கள், எவ்வளவு இரத்த வெள்ளம் ஓடியிருக்கும், எத்தனை குற்றமற்ற ஜனங்கள் எவ்வளவு துன்பங்களை அநுபவித்திருப்பார்கள் என்று எண்ணிப் பாருங்கள்!

பலாத்காரப் புரட்சி நடந்து முடிந்த பிறகு, அதன் பின் விளைவுகள் எத்தனை காலம் மக்களை வேதனை செய்து கொண்டிருக்கும்!

வோட்டுப் பெட்டி மூலம் நடந்த ஜனநாயகப் புரட்சியிலோ, யாரும் எத்தகைய துன்பத்தையும் அடையவில்லை. வெகு சாவதானமாக ஒரு மாபெரும் மாறுதல் நடந்து விட்டது. பழைய மந்திரிகள் புதிய மந்திரிகளிடம் அரசாங்கத்தை ஒப்படைத்து விட்டு விலகிக் கொள்கிறார்கள்.

பொது மக்களின் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள இவ்வளவு அருமையான நேர் வழி இருக்கும் போது, அரசியல் வாழ்க்கையில் பலாத்கார முறைகளைப் பிரசாரம் செய்வது எவ்வளவு பெரும் மூடத்தனம்! மூடத்தனம் இல்லையென்றால், எவ்வளவு பெரிய பைசாசத்தனம்!

ஜனநாயக முறையின் கீழ் மிகச் சிறுபான்மையோரான ஒரு சிலர் பெரும் பான்மை மக்களைத் தங்கள் விருப்பத்திற்குக் கட்டாயப்படுத்த விரும்பினால்தான், பலாத்கார முறைகளைப் பிரசாரம்செய்ய வேண்டியதாகும். அத்தகையவர்கள் நாட்டுக்கும் சமூகத்துக்கும் துரோகம் இழைக்கிறார்கள்.

பெரும்பான்மை மக்களின் விருப்பத்தை நிறைவேற்ற வோட்டுப் பெட்டி முறையே சிறந்த முறையாகும் என்பதைக் கிழக்குப் பாகிஸ்தான் தேர்தல் நிரூபித்திருக்கிறது.

2. சமயத் துவேஷம், சமூக வேற்றுமை, இனப் பகைமை ஆகியவற்றைக் கொண்ட அரசியல் கட்சி நீடித்து இருக்க முடியாது என்பது இரண்டாவது முக்கிய படிப்பினை.

ஹிந்துக்கள் மீது துவேஷத்தை வளர்ப்பதையே முஸ்லிம் லீக் தலைவர்கள் சென்ற பத்து வருஷங்களில் தங்கள் முக்கிய அரசியல் ஆயுதமாகக் கொண்டிருந்தார்கள்.

பாகிஸ்தான் தனியாக ஏற்பட்ட பிறகும் அங்குள்ள முஸ்லிம் லீக் தலைவர்கள் "ஹிந்துக்கள் நம்மை விழுங்கி விடுவார்கள்!" என்றும், "இஸ்லாத்துக்கு ஆபத்து!" என்றும் பூச்சாண்டி காட்டியே தங்கள் செல்வாக்கை நிலை நாட்டிக் கொள்ளப் பார்த்தார்கள். இதற்காக அவர்கள் சிருஷ்டித்த பொய்களுக்குக் கணக்கே இல்லை. பாகிஸ்தான் பத்திரிகைகள் கக்கிய துவேஷ விஷத்துக்கு அளவே யில்லை.

அவ்வளவு வகுப்புத் துவேஷப் பிரசாரமும் அவர்களுக்கு இத் தேர்தலில் கைகொடுக்கவில்லை.

பொருளாதார அடிப்படையில், பொது மக்களின் நன்மைக்குகந்த திட்டங்களின் அடிப்படையில்,—ஏற்படும் அரசியல் கட்சிகளுக்கே பொது மக்களிடையில் செல்வாக்கு ஏற்படும்.

அத்தகைய பொருளாதார அடிப்படையில் தங்கள் கட்சியை அமைத்துக் கொண்டபடியால் தான் ஜனாப் பஸ்லுல் ஹக்கின் கட்சி இந்த மகோந்நதமான வெற்றியை அடைந்திருக்கிறது.

சமயத் துவேஷம், வகுப்பு வெறி, இனப் பகைமை ஆகியவை சிற்சில சமயம் மக்களில் ஒரு பகுதியினரை ஆட்டி வைக்கலாம்.

ஆனால் அவற்றின் சக்தி ஒரு நாளும் நீடித்திருக்க முடியாது என்பது நிச்சயம்.

பாகிஸ்தானிலேயே வெற்றி காண முடியாத தீய துவேஷ சக்திகள் பாரத நாட்டில் வெற்றி காண முடியுமா, என்ன!

கிழக்குப் பாகிஸ்தான் தேர்தல் முடிவுகளின் இந்தப் படிப்பினைகளினால் இந்தியாவிலும் உலகெங்கிலுமுள்ள அரசியல் வாதிகள் பலன் பெறுவார்கள் என்று நம்புகிறோம்.




அமெரிக்காவுடன் இராணுவ ஒப்பந்தம் செய்து கொண்ட பாகிஸ்தான் சர்க்காருக்குக் கிழக்கு வங்காள மக்கள் தேர்தலில் சரியான பாடம் கற்பித்து விட்டனர்.

# புதுச்சேரியில் திடீர்ப் புரட்சி

பிரஞ்சு இந்தியப் பிரதேசத்தில் நடவாதது நடந்திருக்கிறது; நம்ப முடியாத சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

நேற்று வரையில் புதுச்சேரியிலே பிரஞ்சு ஆட்சியின் வலக்கரமாக விளங்கி வந்த பிரமுகர்கள் திடீரென்று பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் அடைந்து விடவேண்டும் என்று முடிவு செய்திருக்கிறார்கள்.

பிரஞ்சு இந்திய சர்க்கார் நிர்வாகத்தை நடத்தி வரும் ஸ்ரீ எட்வர்ட் குபேர் உள்பட ஐந்து மந்திரிகள் பிரஞ்சு இந்தியா பாரத நாட்டுடன் இணைக்கப்பட்டு விடவேண்டும் என்று பிரகடனம் செய்திருக்கிறார்கள். பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் உள்ள மேயர்களும், ஜனப் பிரதிநிதி சபை அங்கத்தினர்களும் அக்கோரிக்கையை மனப் பூர்வமாக ஆதரித்திருக்கிறார்கள். பிரஞ்சு இந்திய மந்திரிகள் தங்களுடைய தீர்மானத்தைப் பிரான்ஸ் தேசத்து ஜனுதிபதிக்கும் மந்திரி சபைக்கும் அறிவித்திருக்கிறார்கள்.

இதை யெல்லாம் கண்டு பாரிஸில் உள்ள பிரஞ்சு சர்க்கார் தலைவர்கள் அதிர்ச்சி யடைந்து, என்ன செய்வதென்றே புரியாமல் திணறிக் கொண்டிருப்பதாகச் செய்திகள் கூறுகின்றன.

பாரத நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சியாகிய பெரு மழை விட்டது. ஆனால், பிரஞ்சு ஆட்சியாகிய அற்பமான தூவானம் இன்னும் விடவில்லை. இந்தியா சுதந்திரம் பெற்று ஆறு ஆண்டுகளுக்கு மேலாகியும் நாலு திட்டுப் பிரதேசங்கள் மாத்திரம் இன்னும் பிரஞ்சு சர்க்காரின் ஆதிக்கத்தில் இருந்து வருகின்றன.

பிரஞ்சு இந்தியப் பிரச்னையைத் தீர்க்கும் விஷயமாக அவசரப்பட்டு எதுவும் செய்து விடக் கூடாது, அவ் விஷயமாகப் பொறுமையைக் கையாள வேண்டும் என்று நேருஜி அடிக்கடி வற்புறுத்தி வந்தார்.

பிரஞ்சு சர்க்காரோ வெளியில், தாங்கள் ஜன நாயக தர்மத்துக்குப் புறம்பாக நடக்க முடியாது என்று பசப்பி வந்தார்கள். பிரஞ்சு இந்திய மக்கள் 'விரும்பாத' ஆட்சி முறைக்கு இணங்கும்படி அவர்களை வற்புறுத்துவது ஜனநாயகத்துக்கு உகந்ததல்ல என்று கூறி வந்தார்கள்.

இந்தியாவுடன் ஐக்கியமாவதை எதிர்க்கும் கூட்டத்தின் ஆதரவு தங்களுக்கு என்றென்றும் இருந்து வரும் என்ற நம்பிக்கையுடனேயே பிரஞ்சு சர்க்கார் அவ்வாறு கூறி வந்தார்கள்.

ஆனால், பிரஞ்சு இந்திய சர்க்கார் மந்திரிகள் தங்களுடைய கடமையையும் பொறுப்பையும் உணர்ந்து கொண்டு விட்டார்கள்; தாங்கள் தேச பக்தர்கள் என்பதை நிரூபித்து விட்டார்கள்.

பிரஞ்சு இந்தியத் திட்டுப் பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற கோரிக்கையை அங்குள்ள பொது ஜனங்களும் மந்திரிகளும் சகல கட்சித் தலைவர்களும் ஏகோபித்து ஆதரிக்கிறார்கள் என்பது இப்போது நிரூபணமாகி விட்டது.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பிரஞ்சு அதிகாரிகள் கைநழுவ விடாமல், பிரிட்டிஷ் சர்க்காரின் முன்னுதாரணத்தைப் பின்பற்றிக் கண்ணியமாக நடந்து கொள்ள முற்படுவார்கள் என்று நம்புகிறோம்.

1954

சின்னம்மாபுரம்



ஈரோடுக்கு அருகில் உள்ள முத்தாயிப்பாளையம் ஸ்ரீ மு. மு. சிற்றம்பலம் அவர்கள் காலம் சென்ற தம் மனைவியின் ஞாபகார்த்தமாகச் ''சின்னம்மாபுரம்'' என்ற முப்பத்திரண்டு வீடுகள் அடங்கிய ஒரு கிராமத்தையே நிர்மாணித்து ஹரிஜனங்களுக்கு வழங்கியுள்ளார். சென்ற மார்கழி 21௳ கனம் மந்திரி ஸ்ரீ வி. கெ. பழனிசாமிக் கவுண்டர் அவர்கள் மேற்படி 'சின்னம்மாபுரம்' கிராமத்தைத் திறந்து வைத்தார்கள். இந்தத் திறப்பு விழா பற்றிய விவரங்கள் அடங்கிய கட்டுரை அடுத்த ''கல்கி'' இதழில் வெளியாகின்றது.

போட்டோ:

# நாளுக்கு நாள் "டயர்ஸோல்ஸில்" ஓடும் டிரக்குகள் அதிகரிக்கின்றன



## ஏனென்றால்......







### நாங்கள்

- லாயக்கான மேற்பரப்புள்ள டயர்களுக்கே "சிகிச்சை" யளிக்கிறோம்.
- விலையைப் பொருட்படுத்தாமல் சிறந்த பொருள்களை உபயோகிக்கிறோம்.
- புது ரப்பர் "வல்கனைஸேஷனை" விஞ்ஞான ரீதியில் செய்கிறோம்.
- பழைய மேற்பரப்பிற்கு குந்தகம் விளைவிப்பதில்லை.
- டயர்ஸோல்ஸ் சமனானவை.







## டயர்ஸோல்ஸ்



**அதிக டயர் மைலேஜ்**

**அதிக டயர் பாதுகாப்பு**

குறைந்த செலவில் பெற




**ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் ( ) லிமிடெட்,**

"டயர்ஸோல்ஸ் டிபார்ட்மெண்ட்"

பாக்டரிகள்:
கோயமுத்தூர், மதராஸ், கோட்டயம், பெங்களூர், கல்கத்தா
ஆகிய இடங்களில்.

EP



ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு "டயர்ஸோல்ஸ்" டீலர் உண்டு.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 82

## சீனத்து வர்த்தகர்கள்

ஆதி காலத்திலிருந்து பற்பல தேசங்களிலும் மக்கள் வருங்கால நிகழ்ச்சிகளைப் பற்றி அறிவதற்குப் பிரயத்தனங்கள் செய்து வந்திருக்கிறார்கள். ஏழை எளியவர்களையும் படிப்பில்லாத பாமர மக்களையும் போலவே அரச குலத்தவர்களும் புலமை மிக்க அறிவாளிகளும் எதிர் காலத்தை ஊடுருவிப் பார்க்க முயன்றிருக்கிறார்கள். சோதிட சாஸ்திரிகள், ஆரூடக்காரர்கள், நிமித்தங் கூறுவோர், குறி சொல்லுவோர், ரேகை பார்ப்போர் முதலியவர்கள் கல்வியறிவிலும் நாகரிகத்திலும் சிறந்த சமூகங்களிலும் பல்கிப் பெருகியிருந்திருக்கிறார்கள். அதைப் போலவே, சோதிட சாஸ்திரத்தின் உண்மையைப் பற்றிச் சந்தேகித்து அந்தக் கலையையே கண்டனம் செய்தவர்களும் இருந்து வந்திருக்கிறார்கள்.

அறிவிற் சிறந்த மங்கையர் திலகமான இளைய பிராட்டி குந்தவையின் உள்ளத்திலும் இத்தகைய போராட்டம் அடிக்கடி எழுந்து கொண்டிருந்தது. ஆயினும் சோழ சாம்ராஜ்யத்தின் வருங் காலத்தைப் பற்றிக் கவலைப்பட நேர்ந்த போதெல்லாம், அந்தக் கவலை குந்தவை தேவியைச் சோதிடர் வீட்டைத் தேடிப் போகும்படி செய்தது.

நியாயமாகப் பார்க்கப் போனால், இப்போது குந்தவையின் உள்ளம் சுந்தர சோழ சக்கரவர்த்தி பெற்றிருந்த மன அமைதியைப் பெற்றிருக்க வேண்டும். எதிர்பாராத நிகழ்ச்சிகள் என்னென்னவோ நேர்ந்து, அருள்மொழி வர்மர் சோழ சிங்காதனம் ஏறி முடி சூட்டிக் கொள்வது நிச்சயமாகி விட்டது. பின்னைப் பிராயத்திலிருந்து குந்தவை தன் இளைய சகோதரனிடம் கொண்டிருந்த எல்லையில்லா வாஞ்சையை நாம் அறிந்திருக்கிறோம். கரங்களில் சங்கு சக்கர ரேகைகளுடன் பிறந்த அருள்மொழி வர்மனால் சோழப் பேரரசு மகோந்நதத்தை அடையப் போகிறது என்று அவள் உள்ளத்தில் பலமான நம்பிக்கை குடி கொண்டிருந்தது. காவேரி வெள்ளத்தில் தவறி விழுந்தவனை, தெய்வமே போன்று வந்த பெண்மணி ஒருத்தி எடுத்துக் காப்பாற்றிய நிகழ்ச்சியும் இன்னும் இது போன்ற வேறு பல சம்பவங்களும் அவளுடைய நம்பிக்கையை மேலும் மேலும் வலுவடையச் செய்து வந்தன. அந்த நம்பிக்கை மெய்யாகும் காலம் இப்போது நெருங்கி வந்திருந்தது. ஆனாலும் அந்த அரசிளங்குமாரியின் உள்ளத்தில் இன்னமும் அமைதி ஏற்படாமற் போன காரணம் என்ன?

அருள்மொழி வர்மனைப் பற்றிக் கூறியது போலவே கொடும்பாளூர் இளவரசி வானதியின் ஜாதக விசேஷத்தைப் பற்றியும் பலர் கூறி வந்தார்கள். உண்மையாக நாளையும் கோளையும் ஆராய்ந்து வருங்காலத்தை உணர்ந்துதான் கூறினார்களோ, அல்லது அச்சமயம் குந்தவை தேவிக்கு உகப்பாக இருக்கட்டும் என்றுதான் சொன்னார்களோ, தெரியாது. ஒரு முகமாகப் பலர் சேர்ந்து கூறும் வாக்கு சில சமயம் அதிசயமாக உண்மையாகி விடுவதைப் பார்க்கிறோம். இன்னும் சிலருடைய வாக்கிலேயே ஏதோ விசேஷம் இருக்கிறது. அவர்கள் சொன்னது சொன்னபடி பலித்து விடுகிறது.

குடந்தையிலிருந்து திருவையாற்றுக்கு வந்து குடியேறிய சோதிடர், அன்றைக்கு

மார்கழி மாதத் திருவாதிரை நாள் என்பதை நினைவு கூர்ந்து, "சோழ குலத்துக்கு மிக்க சிறப்பை அளிக்கப் போகும் நன்னாள் அது!" என்று சற்று அழுத்தமாகக் கூறி வைத்தார்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அதே மார்கழித் திருவாதிரையில் சோழர் குலத்தில் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தை வளர்ந்து உரிய பிராயம் அடைந்த போது, சந்திர குப்தன், அசோகன், விக்ரமாதித்தன், ஹர்ஷ வர்த்தனன் ஆகியவர்களுடன் ஒப்பிடக்கூடிய சக்கரவர்த்தியாகி விளங்கினான். இராஜேந்திரன் என்ற அபிஷேகப் பெயர் பெற்று இலங்கை முதல் கங்கை வரையில், லட்சத் தீவு முதல் ஸ்ரீ விஜயத் தீவு வரையில் வெற்றி கொண்டு ஆணை செலுத்தினான்.

ஜோசியர் கூறிய வார்த்தை இவ்விதம் அதிசயமான முறையில் பின்னால் பலித்து விட்டது. ஆனால் அன்றைக்கு அவர் அவ்விதம் கூறியபோது குந்தவைக்கு அதில் பூரண நம்பிக்கை ஏற்பட வில்லை. வானதிக்கோ சோதிடரின் வார்த்தைகள் கோபத்தையே உண்டாக்கின. அந்தக் கோபத்தை உடனே காட்டுவதற்கு ஒரு வழியும் ஏற்பட்டது.

சோதிடச் சுவடியைத் தூக்கி அந்தப் பெண்ணரசி பூனையின் மேல் எறிந்து விட்டு, "சோதிட சாஸ்திரத்துக்கும் உபயோகம் உண்டு!" என்று கூறினாள்.

அதைக் கேட்ட சோதிடர் திரும்பிப் பார்த்து விஷயம் இன்னதென்பதைத் தெரிந்துகொண்டு, "இளவரசி! வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பார்கள். அது போல் தங்கள் திருக் கரம் பட்ட மகிமையினால் இந்த ஓலைச் சுவடியும் ஓர் உயிரைக் காப்பாற்றியது. வருங் காலத்தில் எத்தனை எத்தனையோ உயிர்களுக்கு அபயம் அளித்துக் காப்பாற்றப் போகும் மலர்க் கரம் அல்லவா?" என்றார்.

வானதி "அக்கா! இந்தச் சோதிடர் முகஸ்துதி கூறுவதில் மிகவும் கெட்டிக்காரர். வாருங்கள், போகலாம்!" என்றாள்.

"தேவி! இன்றைக்கு நான் சொல்லும் வார்த்தைகள் தங்களுக்குப் பிடிக்கவில்லை. ஒரு காலத்தில் நான் கூறியவையெல்லாம் உண்மையாகியே தீரும். அப்போது இந்த ஏழையை மறந்து விடாதீர்கள்!" என்றார் சோதிடர்.

குந்தவைப் பிராட்டி குறுக்கிட்டு, "ஐயா! இந்தப் பெண்ணுக்குத் தங்கள் வார்த்தைகள் பிடிக்காமலில்லை. கேட்கக் கேட்க இவள் மனத்திற்குள் சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் 'யோசனையில்லாமல் ஏதோ ஒரு சபதம் செய்து விட்டோமே' என்று ஆத்திரப்படுகிறாள்! அந்த ஆத்திரத்தைத் தங்கள் ஓலைச் சுவடியின் பேரில் காட்டினாள்! அதைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டாம்!" என்று கூறினாள்.

"நல்லவர்களுக்கு வரும் ஆத்திரமும் நல்ல பயனையே அளிக்கும்! தங்களை இனிய மொழியால் அழைத்த என் அருமைக் கிளி பிழைத்தது அல்லவா?" என்றார் சோதிடர்.

பின்னர் குந்தவை சோதிடரிடம் இன்னும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள். முக்கியமாக அருள்மொழி வர்மருக்குத் திருமணம் எப்போது நடக்கும் என்று கேட்டாள். அதைப் பற்றி இளைய பிராட்டி குந்தவைக்குக் கவலை ஏற்படக் காரணம் இருந்தது.

ஏனெனில், நேற்றைய தினம் சேனாதிபதி பூதிவிக்கிரமகேசரி இளையபிராட்டியிடம் வந்து, "தாயே! நான் கொடும்பாளூர் போகிறேன். என் சகோதரன் மகள் வானதியையும் அழைத்துச் செல்லலாம் அல்லவா?" என்று கேட்டார்.

குந்தவை திடுக்கிட்டு, "மாமா! இது என்ன அவசரம்? பட்டாபிஷேகத்துக்கு இல்லாமலா போகிறீர்கள்?" என்றாள்.

"தாயே! பட்டாபிஷேகத்தின் போது வந்து விடுவேன். அதுவரையில் இங்கு ஏன் காத்திருக்க வேண்டும்? நான் வரும் போது பெரும் சைன்யத்தோடு வந்தேன். தெய்வாதீனமாக, நம்முடைய மனோரதம் சண்டை ஒன்றுமில்லாமலே நிறைவேறுவதாகிவிட்டது. சக்கரவர்த்தித் திருமகன் முடி சூட இணங்கி விட்டார். அதை எல்லாச் சிற்றரசர்களும் ஒப்புக்கொண்டு விட்டார்கள். இனி இவ்வளவு பெரிய சைன்யத்தை இங்கு வைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. இவ்வளவு பேருக்கும் உணவு அளித்து நிர்வகிப்பதும் தஞ்சை நகரத்தாருக்குச் சிரமமாக இருந்து வருகிறது. ஆகையினால் என் சைன்யத்தை அழைத்துப் போய் அங்கங்கே பிரித்து விட்டு விட்டு வரவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது!" என்றார் சேனாதிபதி.

"அப்படியே செய்யுங்கள்! ஆனால் என் தோழி வானதியை எதற்காக அழைத்துப் போக வேண்டும்?" என்று கேட்டாள் குந்தவை.

"தேவி! அதற்கும் ஒரு காரணம் இருக்கிறது. நேற்று சிற்றரசர்களாகிய

நாங்கள் எல்லாரும் கூடி யோசித்து ஒரு முடிவுக்கு வந்தோம். தங்கள் பாட்டனுர் அரிஞ்சய தேவரின் தந்தையாகிய பராந்தக சக்கரவர்த்தி பெண்ணரசிகள் அறுவரை மணந்திருந்தார். என்னுடைய குலத்திலிருந்தும், மிலாடுடையார்குலத்திலிருந்தும், பழுவேட்டரையர், மழவரையர், சம்புவரையர் குலங்களிலிருந்தும் ஒவ்வொரு பெண்ணை மணந்து கொண்டிருந்தார். ஆகையால் அவருடைய காலத்தில் சிற்றரசர்களிடையில் பூசல் ஏதும் இல்லாமலிருந்தது. தங்களுடைய பாட்டனுர் அரிஞ்சயரும் அவ்வாறே பல சிற்றரசர் குலப் பெண்களை மணந்து கொண்டார். அவர் வெற்றி கொண்ட வைதும்பராயர் குலத்திலிருந்து தங்கள் பாட்டியாரை மணந்து கொண்டார். ஆனுல் தங்கள் தந்தை இந்த நல்ல வழக்கத்தை அனுசரிக்கவில்லை. தங்கள் அன்னையாகிய மலையமான் மகளாரை மட்டும் மணந்தார். அதனுல் சிற்றரசர்களுக்குள்ளே பொருமையும் பூசலும் விளைந்தன. இனி, இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடி சூட்டிக் கொள்கிறவர்கள் பராந்தக சக்கரவர்த்தியையும் அரிஞ்சய தேவரையும்போல் பல சிற்றரசர் குலங்களிலிருந்தும் பெண் கொள்ள வேண்டும் என்று நேற்றைக்கு ஏக மனதாக முடிவு செய்திருக்கிறேம். பொன்னியின் செல்வரின் முடி சூட்டு விழா நடந்த பிற்பாடு அவரிடம் இவ்வாறு விண்ணப்பம் செய்து கொள்ள எண்ணியிருக்கிறேம். வானதியை ஏன் ஊருக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன் என்று தாங்கள் ஊகித்துக் கொள்ளலாமே? அவளை இங்கே விட்டிருந்தால் நான் உடன்படிக்கைக்கு விரோதமாக நடக்கப் பார்க்கிறேன் என்று மற்றவர்கள் சந்தேகிக்கக் கூடும்!" என்ருர் கொடும்பாளூர் வேளார்.

இதைக் கேட்ட குந்தவைக்கு உள்ளத்தில் பெரிதும் ஆத்திரம் உண்டாயிற்று. அதை அவள் வெளிக்காட்டிக் கொள்ளாமல், "சேனாபதி! அன்னை தந்தையை இழந்த தங்கள் தம்பி மகளுக்கு நானே தந்தையும் தாயுமாயிருக்க வேண்டும் என்று முன்னெரு சமயம் கேட்டுக் கொண்டீர்கள். அதை மறந்து விட்டீர்களா? வானதியைக் கொடும்பாளூருக்கு அனுப்ப முடியாது. அவளை விட்டுக் கண நேரமும் என்னுல் பிரிந்திருக்க இயலாது. நான் வேண்டுமானுல் வானதியையும் அழைத்துக் கொண்டு பழையாறைக்குப் போய் விடுகிறேன். முடி சூட்டு விழாவுக்குக் கூட வராமல் அங்கேயே இருந்து விடுகிறேம். கல்யாணத்தைப் பற்றிய பேச்சே இப்போது வேண்டாம். பட்டாபிஷேகம் ஆன பிறகு சிற்றரசர்களின் விருப்பத்தைப் பொன்னியின் செல்வரிடம் சொல்லுங்கள்! பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம்!" என்ருள்.

சேனாதிபதியும் அதை ஒப்புக்கொண்டு போய் விட்டார்.

குந்தவை தேவி சோதிடரைத் தேடிக் கொண்டு வருவதற்கு இது ஓர் அதிகப்படியான காரணம் ஆயிற்று. ஆகையினுலேயே பொன்னியின் செல்வரின் திருமணத்தைக் குறித்து அவ்வளவு கவலையுடன் சோதிடரிடம் கேட்டாள்.

அதே சமயத்தில் வானதியின் நினைவு பழையதொரு சம்பவத்துக்குப் போயிருந்தது. அதிலும் ஒரு பறவையும் பூனையும் பாத்திரங்களாயிருந்தன. பூனையுடன் ஒரு யானையும் யானைப் பாகனும் அதில் சம்பந்தப்பட்டிருந்தார்கள்.

மரக் கிளையிலிருந்து தொங்கிய ஒரு பறவையின் கூட்டை அந்தக் காட்டுப் பூனை தாக்கி அதிலிருந்து பறவைக் குஞ்சுகளைக் கபளீகரம் செய்ய முயன்றது. தாய்ப் பறவை கூட்டைச் சுற்றி வந்து பூனையைத் தடுக்கப் பார்த்தது. வானதி அதைக் கண்டு செய்வதறியாது அலறினுள். நதியில் நீந்திக் கொண்டிருந்த இளைஞன் ஒருவன் ஓடி வந்து பார்த்தான். பிறகு அவன் விரைந்து சென்று ஒரு யானையின் மீது ஏறி வந்தான். பறவைக் கூண்டையும் அதிலிருந்த பச்சிளம் குஞ்சுகளையும் அந்தக் காட்டுப் பூனையின் வாயிலிருந்து காப்பாற்றினுன்.

அந்த இளைஞன் யானைப்பாகன் என்று வானதி அப்போது கருதினுள். பின்னுல் அவன் தான் பொன்னியின் செல்வன் என்று தெரிந்தது. ஆகா! அவன் வெறும் யானைப் பாகனுகவே இருந்திருக்கக் கூடாதா? அல்லது சாதாரண வீரனுயிருந்திருக்கக் கூடாதா? அவன் சுந்தர சோழச் சக்கரவர்த்தியின் திருமகனுக இருப்பதால் அல்லவா தான் இத்தகைய தொல்லைகளுக்கு ஆளாக நேர்ந்தது? தன்னையொத்த தோழிமார்களும், பூங்குழலி போன்றவர்களும், சோழநாட்டுப் பட்டத்தரசியாக விரும்பும் கள்ள நோக்கமுடையவள் என்று தன்னைப் பற்றி அவதூறு கூறும்படி நேர்ந்தது......!

வானதி இத்தகைய நினைவுகளிலும் குந்தவை வருங் காலத்தைப் பற்றிச் சோதிடம் கேட்பதிலும் ஈடுபட்டிருந்த

சமயத்தில், சோதிடரின் வீட்டு வாசலில் "சீனத்துப் பட்டு வேண்டுமா? சீனத்துப் பட்டு!" என்ற பெருங் குரல் ஒன்று கேட்டது. வேறு குரல்களும் கேட்டன.

குந்தவையும் வானதியும் தாங்கள் வந்து நேரமாகி விட்டது என்பதை உணர்ந்து எழுந்தார்கள்.

அப்போது சோதிடரின் சீடன் உள்ளே வந்து, "சுவாமி! சீனத்து வர்த்தகர்கள் இருவர் வந்திருக்கிறார்கள். தங்களிடம் சோதிடம் கேட்க வேண்டுமாம்! அவர்களை நாளைக்கு வரும்படி சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

குந்தவை, "வேண்டாம்! இப்பொழுதே வரட்டும். நாங்கள் விடை பெற்றுக் கொள்கிறோம்" என்று சொல்லி விட்டு வானதியின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

இளவரசிகள் இருவரும் வாசலில் வந்த போது, அங்கே ஒரு யானை நிற்பதையும் அதன் பேரில் இரண்டு சீன வர்த்தகர்கள் பெரிய துணி மூட்டைகளுடன் உட்கார்ந்திருப்பதையும் பார்த்தார்கள். கீழே நின்ற யானைப்பாகனிடம் அந்தச் சீனத்து வர்த்தகர்கள் ஏதோ கேட்டுக் கொண்டிருப்பதாகத் தோன்றியது.

அவர்கள் மீது அதிக கவனம் செலுத்தாமல் இளவரசிகள் தங்களுடன் வந்த வீரனை அழைத்துக் கொண்டு சோழ மாளிகை போய்ச் சேர்ந்தார்கள்.

## அத்தியாயம் 83

# அப்பர் கண்ட காட்சி

அன்று முன் இரவில் திருவாதிரைத் திருவிழாவை முன்னிட்டு ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் திருவையாற்றின் விசாலமான மாட வீதிகளில் திருவோலக்கம் எழுந்தருளினார்கள்.

வெள்ளிப்பனி மூடிய கைலயங்கிரியை நினைவூட்டுமாறு வெள்ளியினால் அமைத்த கைலாச வாகனத்தில் அன்று சுவாமியையும் அம்மனையும் அலங்கரித்து வீற்றிருக்கச் செய்திருந்தார்கள்.

ஊர்வலத்தின் முன்னணியில் யானைகளும், ஒட்டகங்களும், பெரிய பெரிய ரிஷபங்களும் சென்றன. அவற்றின் மீது ஏற்றியிருந்த பேரிகைகளும் முரசுகளும் எட்டுத் திசைகளும் எதிரொலி செய்யும்படி முழங்கின. அவற்றின் பின்னால் வரிசை வரிசையாகப் பலவகைத் திருச்சின்னங்களை ஏந்தியவர்கள் சென்றார்கள். விதவிதமான வாத்தியங்களை வாசித்தவர்கள் கோஷ்டி கோஷ்டியாகச் சென்றார்கள். நடன கணிகையர் ஆங்காங்கு நின்று நடனம் ஆடி விட்டுச் சென்றார்கள். நந்தி பகவானும், சண்டிகேசுவரரும், விநாயகரும், வள்ளி தேவயானை சமேதரான முருகக் கடவுளும் தனித்தனி விமானத்தில் அமர்ந்து சென்றார்கள். கடைசியாக, பார்வதியும் பரமேசுவரனும் கைலாச வாகனத்தில் அமர்ந்து சேவை தந்து கொண்டு வந்தார்கள்.

இன்னும் பின்னால் தேவார கோஷ்டியினர் வீணை, மத்தளம், தாளம் முதலிய இசைக் கருவிகளுடன் அப்பரும் சம்பந்தரும் சுந்தரரும் பாடிய திருவையாற்றுத் திருப் பதிகங்களை இசையோடு பாடிக் கொண்டு நடந்து வந்தார்கள்.

முன்னாலும் பின்னாலும் ஆயிரமாயிரம் ஜனங்கள் வீதிகளை அடைத்துக்கொண்டு மெள்ள மெள்ள ஊர்வலத்தோடு போய்க் கொண்டிருந்தார்கள்.

ஜனங்கள் அவரவர்களுடைய மனப் போக்குக்கு ஒத்தபடி, சிலர் யானை ஒட்டகை முதலியவற்றைப் பார்ப்பதிலும், சிலர் வாத்திய கோஷ்டிகளின் கீதங்களைக் கேட்பதிலும், சிலர் தேவ கணிகையரின் நடனங்களைப் பார்ப்பதிலும், பெரும்பாலோர் திருவோலக்கம் வந்த தெய்வ மூர்த்திகளைத் தரிசித்துப் பரவச மடைந்து துதிப்பதிலும் ஈடுபட்டிருந்தார்கள்.

கண்ணுக் கெட்டிய தூரம் முன்னும் பின்னும் நூற்றுக் கணக்கான தீவர்த்திகள் பிரகாசித்து அந்த அபூர்வமான தெய்வ ஊர்வலத்தை ஒரு கனவு லோகக் காட்சியாகச் செய்து கொண்டிருந்தது.

இந்தக் காட்சியைச் சோழ மாளிகையின் மேன் மாடத்திலிருந்து குந்தவையும் வானதியும் பூங்குழலியும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். முதன் முதலில் வந்த முரசு சுமந்த யானைகளிலிருந்து கடைசித் தேவார கோஷ்டி வரும் வரையில் ஆர்வத்துடன் பார்த்து மகிழ்ந்தார்கள். பரவச நிலையிலிருந்த பக்தர்களையும் பலவித வேடிக்கைகளில் மனத்தைச் செலுத்தி யிருந்த பாமர மக்களையும் பார்த்தார்கள். நந்தி தேவர் முதல் சிவன் பார்வதி வரையில் வீதி வலம் வந்த தெய்வ வடிவங்களையும் அவர்கள் தரிசித்து மகிழ்ந்தார்கள்.

அவ்வளவு ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் ஒரு யானையின் மீது இரண்டு சீன

வர்த்தகர்கள் ஏறிக் கொண்டு வருவதை யும், அவர்கள் அவ்வப்போது யானை மேலிருந்து கீழிறங்கி ஜனக் கூட்டத்தி னிடையில் மறைந்து விடுவதையும், பிறகு மறுபடியும் வந்து யானை மீது ஏறிக் கொள்வதையும் கண்டார்கள்.

"ஆகா! இந்தச் சீனர்கள் இருவரும் உண்மையில் வர்த்தகர்களா? அல்லது அயல் நாட்டிலிருந்து வேவு பார்க்க வந்த ஒற்றர்களா?" என்ற ஐயம் குந்தவை யின் உள்ளத்தில் ஏற்பட்டது.

சோழ இராச்சியத்து அரசுரிமை சம் பந்தமாகச் சில நாளாக ஏற்பட்டிருந்த தகராறுகள் — குழப்பங்கள் பற்றிய செய்திகள் உலகெங்கும் பரவி யிருக்கக் கூடியது இயல்பேயாகும்.

அதை முன்னிட்டு, பகை அரசர்கள் இந்த ஒற்றர்களைச் சீன நாட்டு வர்த்தகர் களின் தோற்றத்தில் அனுப்பி வைத் திருக்கக் கூடும் அல்லவா?

இதைப் பற்றிக் குந்தவையும் வானதி யும் பேசிக் கொண்டிருந்தது பூங்குழலி யின் காதில் விழுந்தது. அந்தப் பெண் "தேவி! அவர்கள் கோவில் கோபுர வாசலில் என்னை அணுகிச் 'சீனத்துப் பட்டு வேணுமா' என்று கேட்டார்கள். நான் அவர்களிடம் 'சோழ மாளிகைக்கு வாருங்கள்; தஞ்சையிலிருந்து இளவர சிகள் வரப் போகிறார்கள்; அவர்கள் ஒருவேளை வாங்குவார்கள்!' என்று சொல்லி யிருக்கிறேன். ஆகையால் ஒரு வேளை இங்கு வந்தாலும் வருவார்கள்! உங்கள் சந்தேகத்தை நேரிலேயே கேட் டுத் தீர்த்துக் கொள்ளலாம்!" என்றாள்.

அச்சமயம் கைலயங்கிரி வாகனத்தில் அமர்ந்திருந்த ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் சோழ மாளிகையின் வாசலுக்கு வந்திருந்தார்கள். அங்கே சுவாமியை நிறுத்தச் செய்து தீபாராதனை முதலியன நடந்தன. தெய்வ ஊர்வலத் துடன் வந்த செம்பியன் மாதேவியும் அவருடைய புதல்வரும் விமானம் அங்கிருந்து சென்ற பிறகு அரண்மனைக் குள் பிரவேசித்தார்கள். இளவரசிகள் மேன்மாடத்தி லிருப்பதை அறிந்து அங்கேயே வந்து சேர்ந்தார்கள்.

உற்சவத்தின் சிறப்பைக் குறித்துச் சிறிது நேரம் சம்பாஷணை நடந்தது. பின்னர், சிவஞான கண்டராதித்தரின் தேவி தம் அருமை மகனைப் பார்த்துச் "குழந்தாய்! இந்தத் திருவையாற்றில் அப்பர் பெருமான் கண்ட காட்சியைப் பற்றி ஒரு பதிகம் பாடி யிருக்கிறாரே! அதை நீ ஒரு முறை பாடு, கேட்கலாம்! தேவார கோஷ்டியார் பாடக் கேட்டது எனக்கு அவ்வளவாகத் திருப்தி அளிக்க வில்லை!" என்றார்.

இளவரசிகளும் பூங்குழலியும் அந்தக் கோரிக்கையை ஆமோதித்தார்கள்.

பின்னர், சேந்தன் அமுதனுகிய மது ராந்தகத் தேவர் அந்தப் பதிகத்தைத் தமது இனிய குரலில் பாடினார்.

"மாதர்ப் பிறைக்கண்ணியானை
  மலையான் மகளோடும்பாடிப்
போதொடு நீர்சுமந்தேத்திப்
  புகுவாரவர் பின்புகுவேன்
யாதுஞ் சுவடுபடாமல்
  ஐயாறு அடைகின்றபோது
காதன்மடப் பிடியோடுங்
  களிறு வருவன கண்டேன்!
கண்டேனவர் திருப்பாதம்!
  கண்டறியாதன கண்டேன்!"

இந்த அடியுடன் தொடங்கிப் பின் வரும் பத்து அடிகளையும் மதுராந்தகர் தன்னை மறந்த நிலையில் பாடினார்.

கேட்டுக் கொண்டிருந்தவர்களும் தங் களை மறந்திருந்தார்கள்; அன்று அப்பர் பெருமான் கண்ட காட்சிகளை யெல்லாம் அவர்களும் கண்டார்கள்.

பாடல் முடிந்து சிறிது நேரம் வரையில் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது. பின்னர், குந்தவை செம்பியன் மாதேவியைப் பார்த்து, "அம்மா! அப்பர் இந்தப் பதிகம் பாடிய வரலாற்றை முன்னொரு முறை எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். இப்போது இன்னொரு தடவை சொல்லுங்கள்; இவர்களும் கேட்கட்டும்!" என்றாள்.

மற்றவர்களும் வற்புறுத்திக் கேட்டதன் பேரில் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி அந்த வரலாற்றைக் கூறினார்:

அப்பர் சுவாமி பிராயம் முதிர்ந்து உடல் தளர்ச்சியுற்றிருந்த சமயத்தில் கைலையங்கிரிக்குச் சென்று இறைவனைத் தரிசிக்க விரும்பினார். நெடுந்தூரம் வடதிசை நோக்கிப் பிரயாணம் செய்தார். மேலே நடக்க












முடியாமல் களைத்து விழுந்தார். அச்சமயம் ஒரு பெரியவர் அங்கே தோன்றி, ''அப்பரே! கைலையைத் தேடி நீர் எங்கே செல்கிறீர்? பொன்னி நதிக் கரையிலுள்ள திருவையாற்றுக்குச் செல்லுங்கள்! பூலோக கைலாசம் அதுதான்!'' என்று அருளிச் செய்து மறைந்தார். அது இறைவன் வாக்கு என்று அறிந்த அப்பர் திரும்பித் திருவையாறு வந்தார். அந்த ஸ்தலத்தை நெருங்கி வந்தபோதே அவருடைய உள்ளம் பரவசம் அடைந்தது. பல அடியார்கள் கையில் பூங்குடலையும் கெண்டியில் காவேரி நீரும் ஏந்தி ஐயாறப்பனைத் தரிசிப்பதற்காகச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர்கள் இறைவனுடைய புகழைப் பாடிக் கொண்டு சென்றார்கள். அவர்கள் பின்னால் அப்பரும் சென்றார். அப்போது திருவையாறு நகர்ப்புறத்தில் ஆணும் பெண்ணுமாக இரு யானைகள் வந்தன. அந்தக் களிறும் பிடியும் சிவமும் சக்தியுமாக அப்பருக்குக் காட்சி அளித்தன. ஆலயத்தை அடைவதற்குள் இவ்வாறு பல விலங்குகளையும் பறவைகளையும் ஆண் பெண் வடிவத்தில் அப்பர் பார்த்தார். கோழி பெடையோடு கூடிக் குலாவி வந்தது; ஆண் மயில் பெண் மயிலோடு ஆடிப் பிணைந்து வந்தது; அருகிலிருந்த சோலையில் ஆண் குயிலோடு பெண் குயில் பாடிக் களித்துக் கொண்டிருந்தது; இடி முழக்கக் குர



வில் மூழ்கிக் கொண்டு ஏனம் ஒன்று அதன் பெண் இனத்தோடு சென்றது; நாரையும் அதன் நற்றுணையும் சேர்ந்து பறந்து சென்றன; பைங்கிளியும் அதன் பேடையும் பசுமரக் கிளைகளில் மழலை பேசிக் கொண்டிருந்தன; காளையும் பசுவும் கம்பீரமாக அசைந்து நடந்து சென்றன. இவ்வாறு ஆணும் பெண்ணுமாக அப்பர் சுவாமிகளின் முன்னால் தோன்றியவை யெல்லாம் சிவமும் சக்தியுமாக அவருடைய அகக் கண்ணுக்குப் புலனாயின. உலகமெல்லாம் சக்தியும் சிவமுமாக விளங்குவதைக் கண்டார். "இந்த உலகமே கைலாஸம்; தனியாக வேறு கைலாஸமில்லை" என்று உணர்ந்தார். இத்தகைய மெய்ஞான உணர்ச்சியோடு மேலே சென்றபோது, ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் கைலாஸ வாகனத்தில் எழுந்தருளி வீதி வலம் வருவதையும் பார்த்தார். தாம் அன்று புறக் கண்ணாலும் அகக் கண்ணாலும் பார்த்து அநுபவித்ததை யெல்லாம் ஒவ்வொன்றாக இனிய தமிழில் இசைத்துப் பாடி அருளினார். இத்தனை காலமும் தாம் கண்ணால் கண்டும் கருத்தினால் அறியாமலிருந்தவற்றை இன்று திருவையாற்றில் கண்டு அறிந்து கொண்டதாக ஒவ்வொரு பாடலின் முடிவிலும் "கண்டறியாதன கண்டேன்!" என்று திரும்பத் திரும்ப வியந்து வியந்து கூறினார்.

முதிய எம்பிராட்டியார் கூறி வந்த இந்த வரலாற்றை எல்லாரும் மெய்மறந்து கேட்டுக்கொண்டு வந்தார்கள்.

வரலாறு முடிந்த பிறகு கொடும்பாளூர் இளவரசி ஒரு கேள்வி கேட்டாள்:—"அம்மா! அப்பர் சுவாமிகள் விலங்கினம்-பறவை இனங்களின் காதலைக் குறித்து இப்படியெல்லாம் வியந்து வியந்து கூறி யிருக்கிறாரே? மனித இனத்தைப் பற்றி மட்டும் ஏன் குறிப்பிடவே இல்லை?" என்றாள்.

"மனித குலத்தில் பிரதிப் பயனை விரும்பாமல் உண்மையான அன்பு கொண்ட ஆண்-பெண்கள் இல்லவே இல்லை. அதனாலேதான் அப்பர் மனித குலத்து ஆண் பெண்களைக் குறிப்பிடவில்லை!" என்றாள் பூங்குழலி.

"அது சரியல்ல, மகளே! உன்னையும் என் மகனையும் அப்பர் சுவாமிகள் பார்த்திருந்தால், மனித குலத்தின் காதலையும் சேர்த்துக் கொண்டு பாடியிருப்பார்!" என்றார் செம்பியன்மாதேவி.

"ஆமாம்; ஆமாம்!" என்று மற்ற இருபெண்மணிகளும் ஆமோதித்தார்கள்.

இந்தச் சமயத்தில் அந்த மாளிகையின் வாசலில் ஏதோ சலசலப்பு உண்டாயிற்று. சேவகன் ஒருவன் உள்ளே வந்து "சீனத்துப் பட்டு வர்த்தகர்கள் இருவர் வந்திருக்கிறார்கள். இளவரசிகளைப் பார்த்து விட்டுத்தான் போவோம் என்கிறார்கள்!" என்றான்.

இளைய பிராட்டி வியப்பும் கோபமும் அடைந்து, "அவர்கள் யார் அவ்வளவு அதிகப் பிரசங்கிகள்? இப்போது ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி அவர்களைப் போகச் சொல்!" என்றாள்.

இதற்குள் பூங்குழலி, "தேவி! அவர்களை நான் வரச் சொல்லி யிருந்தேன். மன்னிக்க வேண்டும்!" என்றாள்.

"அப்படியானால் வந்து விட்டுப் போகட்டும்!" என்றாள் இளையபிராட்டி.

சற்று நேரத்துக்கெல்லாம் சீனத்து வர்த்தகர்கள் இருவரும் இரண்டுமூட்டைகளுடனே அங்கு வந்தனர். (தொடரும்)

## எழுதிச் செல்லும் விதி

இதோ, காதலனைப் பிரிந்த காதலி, பிரிவுத் துயரத்தை ஆற்ற மாட்டாமல், காதலனைத் தன்னிடம் சேர்க்குமாறு விதியை இறைஞ்சுகிறாள். ஆனால் அவளை லட்சியம் பண்ணுவதில்லை விதி.

இதை நம்மவர்கள் வெகு நன்றாக உணர்ந்திருந்தார்கள். பதினோராம் நூற்றாண்டிலிருந்த பாரசீகக் கவிஞர் உமர்கய்யாமும் உணர்ந்து பின்வருமாறு கூறினார்.

எழுதிச் செல்லும் விதியின்கை
எழுதி எழுதி மேற்செல்லும்
தொழுது போற்றி நின்றாலும்
சூழ்ச்சி பலவும் செய்தாலும்
அழுது கண்ணீர் விட்டாலும்
அபயம் அபயம் என்றாலும்
வழுவிப் பின்னால் ஏகியொரு
வார்த்தை மாற்றம் செய்திடுமோ?

பாரசீகக் கவிஞர் உமர்கய்யாமின் பாடல்களை அருமையான தமிழில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் மொழி பெயர்த்திருக்கிறார்கள். அதில் மேற்கண்ட பாடலுக்கு நமது சித்திரக்காரர் 'சந்திரா' அருமையான சித்திர விளக்கம் கொடுத்திருக்கிறார்.

சிருஷ்டி நியதிப்படி எழுதிச் செல்லும் விதியின் கையையும், அதை ஒரு பெண்ணரசி 'தொழுது போற்றி நிற்கும்' காட்சியையும் ஜீவகளை ததும்பும் அழகிய சித்திரமாகத் தீட்டித் தந்திருக்கிறார்.

# அழகிற்கு உதாரணம் மஸ்தானி...

பண்டல்கண்ட் பூபதியின் புத்திரி, மஸ்தானி இணையேயில்லாத ஓர் அழகி. மிகுந்த திறமைசாலியும் கூட. நடனக் கலையில் அவளுக்கு நிகர் வேறு இலரே. அவளுடைய ஆடம்பரமான ஆடைகள் அவள் அழகை மிகைப்படுத்தின. இக்காலத்திய ஸ்திரீகளும் அதே மாதிரி நேர்த்தியான ஆடைகளை அடைவதற்கு உதவி செய்யும் N. R. C. ரேயான் நூலுக்கு எமது நன்றி. N. R. C. ரேயான் நூல் உறுதிக்கும், நேர்த்தியான பார்வைக்கும் பெயர் பெற்றது. இந்தியாவில் பெரிய கைத்தறிகளிலும், பவர் லூம்களிலும் 120, 150 டினியர்களில் கிடைக்கும் இந்த N. R. C. ரேயான் நூலையே உபயோகிக்கிறார்கள்.






தி நேஷனல் ரேயான் கார்ப்பரேஷன் லிமிடெட்.

மானேஜிங் ஏஜென்டுகள் : சினாய் அண்டு கம்பெனி லிமிடெட்
ஆபீஸ் : எலைட் ஹவுஸ், ப்ரூஸ் ஸ்ட்ரீட், பம்பாய்-1.
பாக்டரி : மோகனே, கல்யாண், பம்பாய் ஸ்டேட்.

விநியோகிக்கும் ஏஜண்டுகள் :

நாகின்தாஸ் பூல்சந்த் ஜெய், 279, ராமனுஜபுரம் ரோடு, மதுரை
138/1682, போர்ட் மெயின் ரோடு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்
ஜெய் ஸில்க் ட்ரேடிங் கம்பெனி லிமிடெட், 432, அவின்யூ ரோடு, பெங்களூர்

# ஜோதிட அநுபவங்கள்

என் தாயார் எனக்கு எட்டு வயதாயிருக்கும் போதே இறந்து விட்டார். அதற்கப்புறம் என் தகப்பனார்தான் எனக்குத் தாயாகவும், தந்தையாகவும் இருந்து வந்தார். எனக்கு உடன் பிறந்தவர்களே கிடையாது. ஐந்து வருடங்களுக்கு முன் எனக்கு வயது பதினைந்து. அப்பொழுது என் தகப்பனாருக்கு என் விவாகத்தைப் பற்றிய கவலை வந்தது. சோதிடம் பார்த்தார். சோதிடர் எனக்குப் பதினேழாவது வயதில்தான் கல்யாணம் நடக்கும் என்று சொன்னார். அதன் பிறகு என் தகப்பனார் அதைப் பற்றி அதிக சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை. ஜோஸ்யர் அவளுக்குப் பதினேழாவது வயதில்தான் கல்யாணம் நடக்கும் என்று சொல்லியிருக்கிறார் என்று கூறி வந்தார். கடைசியில் பதினேழாவது வயதும் வந்தது. பதினெட்டாவது வயது பிறந்து மூன்று மாதமாகி விட்டது. அதன் பிறகு என் தகப்பனார் மறுபடி என் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு அந்த ஜோஸ்யரிடம் போனார். அவர் ஜாதகத்தைப் பார்த்து விட்டு, "எனக்கு அப்பொழுதே சந்தேகம்தான். ஏனென்றால் இதன்படி இப்பொழுது ஏழரை நாட்டுச் சனி நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் பதினேழாவது வயதின் போது சனி ஆரம்பித்து ஐந்து வருடமாகி விடுகிறதே, அப்புறம் அவ்வளவு கடுமையிருக்காது. ஆகையால் கல்யாணம் நடந்து விடும் என்று நினைத்துத்தான் சொன்னேன். ஆனால் அது நடக்கவில்லை. இனி, சனி விடுதலை ஆன பின்தான் நடக்கும். அதாவது பத்தொன்பதாவது வயதில் கட்டாயம் கல்யாணம் நடந்து விடும்" என்று கூறினார்.

பத்தொன்பதாவது வயதும் வந்தது. ஆனால் கல்யாணம் நடக்கவில்லை. இதன் நடுவில் என் தகப்பனார் படுத்த படுக்கையானார். ஆனால் அப்பொழுதும் அவருக்கு அந்த ஜோதிடத்தில் உள்ள நம்பிக்கை போகவில்லை. ஜோஸ்யரிடம் தன் ஜாதகத்தைக் காட்டினார். "இன்னும் பத்து வருடத்துக்கு ஆயுளைப் பற்றிய பயமே கிடையாது" என்று கூறினார். அதைக் கேட்டுப் பூரித்த சிறிது நேரத்திலேயே அவர் ஆவி பிரிந்து விட்டது. அவருக்குப் பிறகு இவ்வுலகில் எனக்கு யாரும் கிடையாது. இனி நான் என் புத்தியைக் கொண்டுதான் பிழைக்க வேண்டும். அவர் இறந்து மூன்று மாதங்களுக்கு மேலாகிறது.

வில்லிவாக்கம்
3-2-54
ஆர். வனஜா லக்ஷ்மி

*

எனக்கு முதல் பிள்ளை ஆண்பிள்ளை பிறந்தவுடன், பிரபல சோதிடர்கள் பிள்ளை நல்ல நட்சத்திரம், சிம்ம லக்னம், பரணி நட்சத்திரம், தரணி ஆளும், ஆயுர் பாவம் 72-க்குக் குறைவில்லை என்றார்கள். அதை நம்பி நானும் ஒரு பெரிய பங்களாவையும் கட்டி விட்டேன். நடந்தது என்ன! தரணி ஆள்பவன் கட்டின வீட்டைக்கூட ஆளமுடியாமல் தனது இருபத்தோராவது பிராயத்தில் உயிர் நீத்தான்.

என் தகப்பனார் இங்கிலாந்துக்குப் போக மூன்றாம் தேதி புறப்படும் விமானத்தில் இடம் ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் அனேகம் பிரபல சோதிடர்கள் முதல் தேதிதான் சோதிடப் பிரகாரம் நல்ல நாள், மூன்றாம் தேதி நல்ல நாள் இல்லை என்று தடுத்ததின் பேரில் முதல் தேதி புறப்பட்டார். மூன்றாம் தேதி விமானம் லண்டன் போய்ச் சேர்ந்து விட்டது. முதல் தேதி புறப்பட்ட விமானம் முழுவதும் போய்ச் சேராமல் கிளம்பி ஐந்து மணி நேரத்தில் கடலில் மூழ்கி விட்ட செய்தி கிடைத்தது. பிறகும் பல சோதிடர்கள் 'கடலில் விழவில்லை. கரையில் இறங்கி விட்டது. 3 நாள் 1 வாரம் 10 நாளில் வந்து விடுவார்' என்றார்கள். வருஷம் பதினான்கு ஆகி விட்டது. போனவர் திரும்பவில்லை.

எங்கள் வீட்டில் ஒரு பையன் திடீர் என்று காணாமல் போய் விட்டான். சோதிடர் பலன் சொன்னார். 'பையன் மிகவும் கோபமாய்ப் போய் இருக்கிறான்; வந்து சேர ஒரு வருஷம் ஆகும்; கிழக்கே போய் விட்டான்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே, தேடிப் போன ஆளுடன் பையன் மேற்கே இருந்து வந்து சேர்ந்து விட்டான்.

எங்கள் ஊரில் ஒரு பெரிய மிராசுதாருக்கு ஒரே பெண். பல பேர் பெண் கேட்டார்கள். உள்ளூரிலேயே ஒரு நல்ல வரனும் இருந்தது. சோதிடர் சொன்னதின் பேரில் உள்ளூர்ப் பையனுக்கு ஆயுர் பாவம் போதாது என்று, தஞ்சையில் நல்ல நீண்ட ஆயுர் பாவம் உள்ள ஒரே பிள்ளையான ஒருவனுக்குக் கொடுத்தார்கள். பெண் போன மறு வருஷமே ஆண் குழந்தையும் பிறந்தது. மறுமாதம் குழந்தையும் இறந்தது. கணவனும் உயிர் நீத்தார். பெண் தாய் வீடு வந்துசேர்ந்து விட்டாள். உள்ளூர்ப் பையன் வேறு பெண்ணை மணந்து கொண்டு குழந்தை குட்டிகளோடு சுகமாகக் குடித்தனம் நடத்தி வருகிறான்.

பெரம்பண்ணையூர்
30-1-54
எஸ். மேரி செல்வம்

*

நான் சில வருஷங்களுக்கு முன்னால், ரங்கூனிலிருந்து நடைபாதையில், கால் நடையாக நடந்து வந்த பாக்கியசாலிகளில் ஒருவன். ரங்கூனில் சலவைக் கற்கள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை யொன்றில் மானேஜராக இருந்தேன். ஜப்பானியரின் குண்டு வீச்சு எங்கள் கம்பெனியைப் பாழாக்கி விட்டாலும், நானும் என்னிடம் வேலைசெய்து வந்த சில ஆட்களும் அக்குண்டுகளுக்கு இரையாகாமல் தப்பினோம். நானும் என் கம்பெனி ஆட்களும், இந்தியாவை நோக்கி நடக்கப் புறப்பட்டு விட்டோம். ரங்கூனில் குண்டு வீச்சு நடந்ததை யறிந்த என் பெற்றோர்கள், என்னுடைய ஜாதகம், ராசிபலன் முதலியவைகளைப் பார்ப்பதற்கு ஆரம்பித்து விட்டார்கள். என் பெற்றோர்கள் எந்த வேலை செய்வதாயிருந்தாலும், உடனே நாள் குறிப்பு, ராசிபலன் முதலியவைகளைப் பார்த்துத்தான் செய்வார்கள். என் பெற்றோர்களுக்கு என்னைப் பற்றிக் கவலை உண்டாகி விட்டது. ஆகையால் பெரிய ஜோசியர் ஒருவரிடம் மூன்று கேள்விகளுக்கு ஐந்து ரூபாய் என்று பணம் கொடுத்துக் கேட்டார்கள். அவர், என் தாய் தந்தையரிடமே என்னைப் பற்றிய விவரங்களை கேட்டுத் தெரிந்து கொண்டு, நான் ஒரு மாதத்துக்கு முன் குண்டு வீச்சில் சிக்கி மடிந்துவிட்டேன்

என்றும், இனிமேல் என்னைப் பற்றிக் கவலைப் பட்டுப் பயனில்லை யென்றும் சொல்லி, அவர்களைப் பயமுறுத்தி விட்டார். அவர்கள், அழுது புரண்டு கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

ரங்கூனிலிருந்து கால் நடையாகப் புறப்பட்ட நாங்கள் மாண்டலேக்குப் போய்ச் சேர்ந்தோம். மாண்டலேயிலும் ஜப்பானியரின் குண்டு வீச்சு எங்களைத் தொடர்ந்து வந்தது. மாண்டலேயின் பெரிய கடைவீதி தவிடு பொடியாகி நாசமாகி விட்டது. எங்களுடன் வந்த போலாசிங் என்பவன் ஜாதகம் பார்ப்பதில் நிபுணன். அடிக்கடி ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பான். அவன் வயது சுமார் 45 இருக்கும். அவன் "வீடு போய்ச் சேர்ந்து சுகமாக இன்னும் 40 வருஷம் இருப்பேன்" என்றும் அவனுக்கு 85 வயதில் தான் சாவு என்றும் சொல்வான். அவன் எங்கள் பக்கத்தில் இருப்பதால்தான் அவனுடைய பலாபலன் எங்கள் எல்லோரையும் குண்டு வீச்சிலிருந்து தப்பித்து விடுகிறது என்றும் சொல்வான். நாங்கள் அது உண்மை யென்றுதான் நம்பிக் கொண்டு அவனை விட்டு நாங்கள் எக்காரணத்தைக் கொண்டும் பிரியாமலிருந்தோம். ஒருநாள் இரவு ஏவுக்கருகில் பெரிய காட்டில் படுத்துக் கொண்டு இருக்கையில், நடு நிசி வேளையில் விமானங்கள் எங்கள்மீது ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தன. எங்களுக்கு நடந்து வந்த அலுப்பில், எழுந்து ஓடியச் சக்தி யில்லாமையால் அந்தக் குண்டில் செத்தாலும் பரவாயில்லை யென்று நாங்கள் அவ்விடத்தை விட்டு நகரவே மறுத்து விட்டோம். போலாசிங் எழுந்து நாங்கள் இருந்த இடத்திலிருந்து சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்தில் ஒரு படுகுழி யிருந்தது. அக் குழியில் ஒளிந்து கொள்ளலாம் என்று நினைத்து அவ்விடம் போய் உட்கார்ந்து கொண்டு பீடி ஒன்றை யெடுத்துக் கொளுத்தி வாயில் வைத்தான். அவ்வளவுதான் திடும், திடும் என்று இரு சத்தங்கள் கேட்டன. நாங்கள் எங்கள் தலைமீது 'பாம்' விழுந்து விட்டதென்று அப்படியே குப்புற விழுந்து விட்டோம். பூமி ஆட்டங் கொடுத்தது. மண் புழுதியும் புகையும் எங்களை மூடிக் கொண்டது. அரை மணி நேரம் கழித்துத்தான், குண்டில் நான் இறக்கவில்லை யென்று எனக்குச் சுய உணர்வு வந்தது. நான் என் பக்கத்திலிருந்தவர்களைப் பார்த்தேன், அவர்களும் உயிரோடு இருக்கிறோமா, என்பதைப் பார்த்துக் கொண்டார்கள். பிறகு போலா சிங்கின் ஞாபகம் வந்தது. அவன் எங்களுடன் இருந்து போய்விட்டதால்தான், எங்களுக்கு இந்த ஆபத்து வந்தது என்று நினைத்தோம். அவனுடன் போய் ஒளிந்து கொள்ளாமைக்காக வருந்தினோம். எல்லோரும் சேர்ந்து போலாசிங்கைக் கூப்பிட்டுக் கொண்டே போனோம். ஆனால், போலாசிங் பதில் பேசவில்லை. நாங்கள் கத்தினோம், இன்னும் சற்று அருகில் போனோம்......

அவன் ஜாதகம் அத்துடன் முடிந்துவிட்டது. மீதியுள்ள என் நண்பர்களும் நானும், புறப்பட்டுச் சென்னையிலுள்ள பர்மா அகதிகள் முகாமிற்கு வந்து சேர்ந்தோம். என் பெற்றோர்கள் நான் வருவதற்கு முன்னால், ஜோசியரின் வார்த்தைகளை நம்பி, இனி நான் உயிருடன் வர மாட்டேன் என்று எங்கள் வீட்டைக் காலி செய்து கொண்டு கிராமத்துக்குப் போய் விட்டார்கள். அவ்வூரிலுள்ளவர்கள் எனக்காக வருந்தித் துக்கம் விசாரித்தார்களாம். என் தகப்பனார் அதே கவலையில் நோயில் விழுந்து விட்டார். திடீரென்று ஒரு நாள் இரவு நான் என் ஊருக்குப் போன போது, என்னை எல்லோரும் பேயைப் பார்ப்பதைப் போல் பார்த்துக் கதற ஆரம்பித்து விட்டார்கள். நான் விசாரித்ததில், ஜோசியம் இக்கதிக்கு எங்களைச் செய்துவிட்டது என்று என் தாய் புலம்பினாள். நான் இதுவரையிலும் சௌக்கியமாய்த் தான் இருக்கிறேன் என்பதை யறிந்த பெரம்பூரிலிருந்த என் நண்பர்களும், உறவினர்களும் என்னை வேடிக்கை பார்க்க வந்துவிட்டார்கள். ஆகையால் ஜோசியம், தினப் பலன் முதலியவைகளில் நம்பிக்கை வைப்பதில் பயனில்லை யென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பெரம்பூர்
22—2—54

எஸ். கிருஷ்ணசாமி

★

ஜோசியக் கலையைப் பயின்று வரும் ஒரு மாணவி என்ற முறையில் ஏற்பட்ட ஒரு சில அநுபவங்களை எழுதுகிறேன்.

என் தோழி ஒருத்திக்குப் போன வருடம் "சுபகாரியம் நடக்கலாம்" என்று பலன் கூறினேன். அவள் தாயார் தனக்கு மாப்பிள்ளை வரும் வேளை வந்து விட்டது என மகிழ்ந்தாள். ஆனால் அந்தப் பெண் இரண்டு முறை தவறின விசாரத் பரீட்சையில் நான் சொன்ன காலவரையறைக்குள் தேறி வைத்தாள். குருபலன் பெண்களுக்கும் பரீட்சையில் தேர்ச்சியைத் தருகிறது. எனது பதினாறாவது வயதில் மெத்தப் படித்த ஒரு ஜோசியர் "1948 ம் வருஷம் முடியுமுன் விவாகம் நடக்கும்" என்றார். ஆனால் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் பள்ளியில் முதல் மாணவியாக நின்ற பெருமையைத் தந்தது அந்த குரு!

சமீபத்தில் ஒரு ஜாதகம் பார்த்தேன். "இந்த ஜாதகனுக்கு நான்கு நாக்குகள் இருக்கின்றன!

நிடசித்த மில்லாதவன்'' என்றேன். அதற்கேற்றாற்போல் தன் விவாக விஷயத்தில் ஒரு சந்தர்ப்பத்தில் ''பெண்ணை எனக்கு ரொம்பப் பிடிக்கிறது. மேலே ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொல்லி விட்டு, சாவகாசமாக ''பெண்ணைப் பிடிக்கவில்லை எனக்குக் கல்யாணம் வேண்டாம்'' என்று சொல்லிப் பெண் வீட்டாரை வீண் வேதனைக்கு உள்ளாக்கினான்! இத்தனைக்கும் அரசாங்கத்தில் பொறுப்பான பதவி வகிக்கும் உத்தியோகஸ்தன் அவன்! சுபாவங்கள் ஜாதகங்கள் மூலம் நன்றாகத் தெரிகிறது!

என்னுடைய தோழி ஒருத்திக்கு ஆறு வருடங்கள் வரன் தேடியும் விவாகமாகவில்லை. ஒரு சில நவக்கிரஹ ஸ்தோத்திரங்கள் சொல்லும்படி சொன்னேன். நாற்பது நாட்களுக்கு உள்ளாக விவாகம் நிச்சயமாயிற்று.

'நல்ல வேளை' என்று குறித்துக் கொடுத்தால் அந்த வேளையில் அசுபமான சக்திகள் குறைவு என்பதுதான் அர்த்தம். அவசியம் காரியம் சித்தியடையும் என்ற வேளைகள் மிகக் குறைவு. மக்கள்மீது தம் சக்தியைச் செலுத்தும் நவக்கிரகங்களில் நான்குதான் சுபமானவை. பாதிக்கு மேல் விரும்பாதன நிகழும். வாழ்வில் எதனையும் எதிர்க்கத் தைரியமில்லாத கோழைகள் ஜோசியம் பார்க்கவும் கூடாது; கேட்கவும் கூடாது. ஜோசியர் கையில் 'தன் வாழ்க்கை நலம் உள்ளது. உத்தியோக உயர்வு இருக்கிறது' என்ற பாவத்தில் ஜோசியம் கேட்கப் போவோர் பலர். கோள்களின் சார ரீதியாக உலக மக்கள் அனைவரையும் 12 ராசிகள் 27 நட்சத்திரங்களில் அடைத்து அவர்களின் தலைவிதியை நிர்ணயிப்பது தவறு ஆவதில் ஆச்சரியமில்லை.

பொழுது போக்காக இந்தக் கலையை மேற்கொண்ட நான் கடைசியில் வந்த முடிவு இதுதான். நடக்கவேண்டும் என்றிருப்பதை யாராலும் தடுக்க முடியாது. கீதையில் கண்ணன் சொல்வது போலப் பிராரப்தத்தை அழிக்க யாராலும் முடியாது. ஆனால் ஜோசியம் முதலான பல கலைகளுக்கும் அப்பாற்பட்ட மகத்தான ஒரு சக்தியிடம் நம்பிக்கை வைத்துச் செய்தால், கிரகங்கள் சுட்டிக் காட்டும் கஷ்டங்களையும் தொல்லைகளின் வேகத்தையும் அதிகமாக உணராமல் கடந்து விடலாம் என்பதே!

கோயமுத்தூர்
20—2—54

கே. ஸ்ரீமதி பி.ஏ.

*

''சுவாமி! நீங்கள் கொஞ்சமும் பயப்பட வேண்டாம். கிரகங்களின் தோஷத்தினால் உடம்பு இப்படிக் கொஞ்சம் படுத்துகிறதே தவிர வேறொன்றுமில்லை. உங்கள் பெண்ணுக்கு அறுபது வயது வரை சாவே கிடையாது.''

''குழந்தையின் உடல் நிலை நாளுக்கு நாள் என் நம்பிக்கையைக் குறைத்து வருகிறதே தவிர, பிழைப்பாள் என்று தோன்றவில்லையே. நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால் பிழைத்து விடுவாள் என்று சந்தோஷமாயிருக்கிறது, ஐயா!''

ஜோசியர் கிரகங்களை ஆராய்ந்து சொன்னதைக் கேட்ட என் தகப்பனார் சந்தோஷத்தினால் பூரித்துப் போனார். ஆனால் நடந்ததென்ன? எங்கள் அன்புக்கு உகந்த, சூது வாது அறியாத வாழ்க்கையில் கனவிலும் பிறர்க்குத் தீங்கு நினைத்தறியாத என் சகோதரி பத்து தினங்கள் சென்று காலனின் மரணப் பிடியில் சிக்கி எங்களைவிட்டு நிரந்தரமாகப் பிரிந்து விட்டாள். இந்தச் சந்தர்ப்பத்தில் சோதிடர் சொன்னதை நம்புவதா, தலைவிதி யென்றும் ''அன்று எழுதியபடிதான் நடக்கும்'' என்றும் சொல்லுவார்களே அதை நம்புவதா என்றே புரியவில்லை.

அடுத்து நிகழ்ந்த சம்பவம். நான் அவ்வருடம் எஸ். எஸ். எல். ஸி. தேர்வுப் பரீட்சை எழுதியிருந்தேன். தேர்வுபெறும் அளவுக்குத் திறமையாக எழுதியிருந்த போதிலும் தேர்ச்சி பெறுவோமோ, மாட்டோமோ என்று ஐயம் கொண்டிருந்தேன். அது எல்லா மாணவர்களுக்கும் இயல்புதானே! அவ்வாரம் வெளியான பத்திரிகையொன்றின் மாத சோதிடப் பலனில் என் தாயாரின் ராசிக்குக் ''குழந்தைகளில் ஒன்று எதிர்பாராத விதமாகப்

## நடன வித்தியாலய ஆண்டு விழா



பெரம்பூர் பாத நாட்டிய வித்தியாலயத்தின் எட்டாவது வருஷாந்திர விழா மார்ச் மாதம் ஏழாந் தேதி பெரம்பூர் ஆர். பி. ஸி. ஸி ஸி. ஹைஸ்கூலில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அவ்வைபவத்துக்குத் திருவல்லிக்கேணி தேசீயக் கல்வி சங்கஸ்தாபகர் ஸ்ரீ என். கே. திருமலாச்சாரியார் பி.ஏ., பி.எல்., தலைமை வகித்தார். மேற்படி மாணவிகளின் நடனத் திறமையையும் வித்தியாலய ஆசிரியை ஸ்ரீமதி ருக்மணி ஸ்ரீநிவாசனின் சேவையையும் தலைவர் வெகுவாகப் பாராட்டினார். நடனத்தில் கலந்து கொண்ட மாணவிகளையும் அவர்களுக்கு நடனப் பயிற்சி அளித்த ஆசிரியையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.

பரீட்சையில் தேர்வு பெறும், ஜூன் பதினெட்டாம் தேதி அதிர்ஷ்ட நாள்" என்றும் எழுதியிருந்தது. அதன்படியே அவ்வருஷம் நிறைய மார்க்குகள் வாங்கித் தேர்வு பெற்றேன். தேர்வு முடிவு தெரிந்த தேதி ஜூன் பதினெட்டு. அப்பதிப்பில் போட்டிருந்த பலன் என் வரையில் சதவிகிதம் பலித்து விட்டது.

"இந்தக் கடிதம் ஆசிரியரின் மனத்துக்கு உகந்ததாய் அமைந்து 'கல்கி' வாரப் பதிப்பிலும் பிரசுரிக்கப்பட்டு, அதனோடு நில்லாமல் நமக்குச் சன்மானமும் கிடைக்குமா?" என்று நான் என் ராசி பலனை ஆராய்ந்து இந்தக் கடிதத்தை அனுப்ப முடியுமா? கடிதம் ஆசிரியரின் குப்பைக் கூடையை அடைந்தாலும் அடையலாம்.

ஆகவே அன்றாடம் நம் கடமைகளைச் செய்யச் சோதிடம் பார்க்கத் தேவையே யில்லை. இவ் விஷயத்தில் மக்கள் அதிக நம்பிக்கை வைத்துத் துன்பம் வந்தகாலே "இப்படி நேர்த்ததே" என்று மனமுடையவும் கூடாது. ஒரு அளவோடிருந்து வருவதை எதிர்கொள்ளும் திடம் வேண்டும்.

சிந்தாதிரிப்பேட்டை
24—2—54
டி. ராஜேஸ்வரி

★

எனக்கு வயது முப்பத்தொன்று ஆகிறது. எனக்கும் பத்து வயதில் எனது கை ரேகையைப் பார்த்து விட்டு, "உனக்கு ஒரு தபால் சேவகன் வேலை கிடைக்கும்" என்று ஒரு சாஸ்திரியார் சொன்னார். பத்து வருஷமாக எதிர் பார்த்தேன்; கிடைக்க வில்லை. பதினைந்தாம் வருஷத்தில் சாஸ்திரியார் சொன்னபடி எனக்குத் தபால் சேவகன் வேலை கிடைத்தது. அதிலிருந்து எனக்குச் சோதிடத்தில் அதிக நம்பிக்கை இருக்கிறது. நானும் சாஸ்திரியார் சொன்னதிலிருந்து அநேக சோதிடப் புத்தகங்களைப் பார்த்திருக்கிறேன். அநேக சாஸ்திரக்காரர்களுடன் ஆலோசித்துப் பார்த்திருக்கிறேன். சோதிடம் என்பது உண்மை. ஆனால் அதைப் பார்த்துச் சொல்லுகிறவர்களுடைய பிழைகளால்தான் சாஸ்திரத்தில் ஜனங்களுக்கு நம்பிக்கையில்லாமல் போய் விடுகிறது.

கோடிகாமம்-யாழ்ப்பாணம்
14—2—54
ஏ. கனகரத்தினம்

★

மதுரையில் 1946-ம் வருடம் எனது ஜாதகத்தைப் பார்த்த ஒருவர் என் மனைவியை நான் கூடிய சீக்கிரம் இழந்து விடுவேன் என்று கூறினார். என் மனைவி 1945-ம் வருடம் கூனூரில் இரண்டு குழந்தைகளைப் பெற்று அவைகளிரண்டும் இறந்து போனதுடன் என் மனைவியின் உடல் நிலையும் நாளதுவரையில் குடும்பம் நடத்த முடியாத நிலையிலிருந்து வருகிறது. எனக்குத் தற்சமயம் வயது 29. ஆகவே எனது 22-வது வயதிலேயே என் மனைவி உடல் நலம் குன்றியதால் நான் என் ஜாதகத்தையும் என் மனைவியின் ஜாதகத்தையும் பலரிடம் காட்டினேன். ஒவ்வொரு ஜோசியனும் சொன்ன பலன்களை நினைத்தால் இன்றுகூட எனக்குச் சிரிப்பு வருகிறது! ஒருவர் எனக்கு 1946-ம் வருஷம் மதுரையில் கலியாணம் கூடிய சீக்கிரம் நடக்குமென்றார். மற்றொருவர் (மேற்கூறியவர்) என் மனைவியை இழந்து விடுவேன் என்றார். இன்னொருவர் தன்னிடம் ரூ. 100 கொடுத்தால் கார்த்த வீர்யார்ஜுன ஹோமஞ் செய்து என் மனைவிக்குள்ள தோஷத்தை நிவர்த்தி செய்வேனென்றார். செய்தும் பலனில்லை. இன்னொருவர் திருப்பதிக்கு 7 முறைகள் சென்று வந்தால் குணமாகுமென்றார். அதுவும் செய்தேன். ஆனால் பலனில்லை. எனக்குச்

# சரியான வழி!



ஒரு முக்கியமான விஷயத்தை நாடெங்கும் பரவச் செய்ய வேண்டும் என்றால் ரேடியோ விலும் முடியாது......



பெரிய பிரசங்கங்கள் மூலமும் முடியாது........



... செய்திப் பத்திரிகைகள் மூலமாகப் பிரசாரம் செய்தாலும் முடியாது.....



அந்த விஷயத்தைக் காதோடு காதாகப் "பரம ரகஸ்யம்' ஒருவருக்கும் தெரியக்கூடாது" என்று சொன்னால் போதும்; பரவி விடும்.

சனி தசையில் ராகு புக்தி நடக்கின்றதென்றும், குரு புக்தி வந்தவுடன் எல்லாம் சரியாகிவிடுமென்றார். இன்னொருவர் சனி தசை போய்ப் புதன் தசை புக்தி போனால்தான் நன்மை என்றார். இன்னொருவர் எனக்கு இரண்டாவது திருமணம் நடந்தே தீருமென்றார். மற்றொருவர் அவருக்கு ரூ. 200 கொடுக்கும் பக்ஷத்தில் நான் எந்தப் பெண்ணை விரும்புகிறேனோ அவளை அவள் பெற்றோரிடம் சொல்லி (ஜாதகத்தைப் பொருத்தமாகும்படியாகக் காட்டி)எனக்கு முடித்து வைக்கிறேன் என்றார். எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு புண்ணியவான் என் ஜாதகமே தப்பிதம் என்று ஒரு போடு போட்டார். எனக்கு ஜோதிடத்திலேயே நம்பிக்கை போய் விட்டது.

அஷ்டமியில் கிருஷ்ணனும் நவமியில் ராமபிரானும் பிறப்பு எடுத்தார்கள். பகவானே விலக்காத இந்த அஷ்டமி நவமிகளை ஜோதிடம் படித்ததாகக்கூறும் புண்ணியவான்கள் ஏன் விலக்கவேண்டும்! "அவிட்ட நக்ஷத்திரத்தில் பிறந்தவன் வீட்டில் தவிட்டுப் பானையெல்லாம் பவுன்" என்கிறார் மற்றொரு பழமொழிகாரார். ஐயா! சுத்தப் பொய்! அவிட்ட நக்ஷத்திரத்தில் பிறந்த என் நண்பர்கள் இரண்டு பேருடைய வீட்டில் தவிட்டுப் பானைகளைத் திருட்டுத்தனமாக உடைத்துப் பார்த்தேன். தவிடே யில்லை! பொன்னுக்கு எங்கே போவது! ஆகையினால் பிராசத்தைக் கொண்டுள்ள ஜோதிடர்கள் ஒழிக! "நாளென் செயும் கோளென் செயும்" என்று ஆண்டவனை வழிபட்டு அவனருளால் வாழ்கவென்று போதிக்கும் புனிதர்கள் வாழட்டும்.

புதுக்கோட்டை
1—2—54

ஸ்ரீராமப் பரதேசி

★

என் தகப்பனார் சோதிடப் பித்துக் கொண்டவர். ஆனால் அவருக்கு வாய்த்த என் அம்மாவும் ஒரே பெண்ணான நானும் சோதிடத்தை அறவே வெறுப்பவர்கள். என் பெற்றோர்களுக்கு என்ன பொருத்தம் பார்த்தார்களோ அது அந்தச் சோதிடர்களுக்குத்தான் தெரியும். கல்யாணம் ஒரு சமயம் உண்டு என்று தந்தி பறந்தால், மற்றொரு சமயம் இல்லை என்று பறக்கும். கடைசியில் எப்படியோ மணமாகி விட்டது. அப்பொழுது சோதிடம் பார்த்தவர்தான் இப்பொழுதும் எங்கள் குடும்ப சோதிடராக இருக்கிறார். ஒரு சமயம் கை ரேகை பார்க்கும் ஒருவர் அப்பாவின் ரேகையைப் பார்த்துவிட்டு, "உங்கள் கல்யாணம் ஏதோ நடந்திருக்கிறதே தவிர, உங்களுக்கும், உங்கள் மனைவிக்கும் சிறிதேனும் பொருத்தமில்லை" என்றார். இதை எங்கள் சோதிடரிடம் சொல்லியதற்கு "நான் என்னம்மா செய்கிறது! அவரவர் தலைச் சுழிப்படிதான் எல்லாம் நடக்கும். பணம், செல்வாக்கு, படிப்பு முதலிய வசதிகள் இருந்தாலும் விதியின் பிடியிலிருந்து நம்மைப் பிரிக்க முடியாது" என்கிறார்.

நிற்க, எனக்கு இப்பொழுது வயது பதினேழு. இந்தக் குறுகிய காலத்துக்குள் சோதிடத்தில் அவநம்பிக்கை ஏற்படப் பல காரணங்கள் ஏற்பட்டு விட்டன. ஆனால் ஒரு சில காரணங்களையே சொல்லுகிறேன். என்னுடைய ஜாதகத்தைப் பார்த்தவர், "நீ மிகவும் அதிர்ஷ்டசாலியான பெண். உனக்குப் படிப்பு இன்னும் நாலு வருஷங்களுக்குத் தீர்மானமாக இருக்கிறது. நீ ஒரு பட்டதாரியாவாய்" என்றார். ஆனால் நானோ எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து விட்டு வீட்டிலே இரண்டு வருஷங்களாக உட்கார்ந்திருக்கிறேன்.

எல்லாவற்றையும் விடச் இந்த சம்பவம்தான் மிகவும் வேடிக்கையானது. ஒரு சமயம் நல்ல சோதிடர் என்று எல்லோராலும் கூறப்பட்ட ஒருவரிடம் எங்கள் சித்தியின் ஜாதகத்தைக் காண்பித்தோம். முதலில் எடுத்ததும் அவர் அந்த ஜாதகத்திற்குரியவர் நல்ல தீர்க்காயுசு உடையவர் என்று ஆரம்பித்தார். ஆனால் என்ன ஆச்சரியம், எங்கள் சித்தி அல்பாயுசில் இறந்து எட்டு வருடங்களாகின்றன: இவைகளிலிருந்து, சோதிடம் என்பது ஜனங்கள் பணம் பறிக்கும் முறைக்குச் சாதகமாகக் கையாளும் ஆயுதம் என்பதே எனது அசைக்க முடியாத நம்பிக்கை.

மாயூரம்
29—1—54

மீனாக்ஷி

★

என் நண்பர் ஒருவர் ஆரம்பத்தில் யில் சம்பாதியம் பண்ணி இந்தியாவில் எங்கள் ஊரில் சுமார் ஐயாயிரம் ரூபாய் பெறுமான ஆஸ்தியை வாங்கினார். அவர் ஜாதகத்தில் பூரண நம்பிக்கை யுடையவர். பிறந்த குழந்தையைப் பார்ப்பதற்காக, இலங்கைக்குத் திரும்புவதற்குண்டான 'விஸா'வையும் பெற்றுக்கொண்டு இந்தியா சென்றார். குழந்தை ஜாதகத்தைச் சோதிடர்களிடம் காட்டியதில், இன்னும் ஒரு வருஷத்திற்குள் உங்கள் நெருங்கிய உறவினர் உதவியால் இந்தியாவிலேயே தொழில் செய்து குபேரனாக வேண்டிய ஜாதகம் இது என்று கூறி விட்டார்கள். அவ்வளவுதான், ஜாதகத்தை நம்பிய அவர் இன்னும் ஒரு வருஷத்தில் குபேரனாக ஆகப் போகும் தமக்கு இலங்கை வாழ்வு எதற்கு! இந்த ஐயாயிரம் ரூபாய் ஆஸ்தியும் எதற்கு! என்று அதை விற்று ஒரு வருஷத்துக்குத் தாராளமாக ஜீவனம் நடத்த ஆரம்பித்து விட்டார். இது நடந்து ஏறக் குறைய நான்கு வருடமிருக்கும். இன்று அவர் படும் கஷ்டம் எழுதி முடியாது.

கொழும்பு
24-2-54

பானு



செட்டியார்:- என்ன, ஐயா! தலையில் வீங்கி இருக்கிறது?

குட்டையர்:- உங்கள் வீட்டு நிலைப்படி இடித்து விட்டது...!

வேர்க்குருவைப்போக்க
கார்டில்முறையை அனுசரிக்கவும்

# கார்டில்
# ப்ரிக்ளீ ஹீட்
# பவுடர்




கார்டில் சருமத்தை ஊனியற்ற முறையில் மேன்மை படுத்துகிறது.

வேனிற் காலத்திய உபாதைகளை குணப் படுத்தும் பொருட்டு விசேஷமான ரசாயன முறைகளினால் தயாரிக் கப் பட்டது. கோடை காலத்திய எரிச்சல் அறிப்பு முதலியவைகளை உடனடியாகக் குணப் படுத்தும்.

வருகிறது கோடைகாலம்

## " கார்டில் "

உபயோகியுங்கள்




## 3. பூபதியின் ஆனந்தம்

குதிரையில் வைத்துக் கட்டப் பட்டிருந்த பூபதி பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான். ஆனால் சில விநாடிகள்கூட அவனால் ஒன்றையும் பார்க்க முடியவில்லை. குதிரைகளின் குளம்பு அடிகளிலிருந்து கிளம்பிய புழுதிப் படலம் வானளாவ எழுந்து அவன் வந்த வழியை மறைத்தது.

பூபதியின் மனம் பசுக் கூட்டத்திலேயே லயித்திருந்தது. "பசுக்கள் அனேகமாகத் தாமாகவே பண்ணைக்குத் திரும்பிப் போய் விடும். அவைகளுக்கு வழி நன்றாய்த் தெரியும். ஆனால் நான் இல்லாமல் பசுக்கள் மட்டும் தனியாகப் போனால் எஜமான் என்ன நினைத்துக் கொள்வார்!" என்று அவன் நினைத்தபடி போய்க் கொண்டிருந்தான்.

அன்று வெகு நேரம் பிரயாணம் செய்து நடுப் பகல் வேளையில் ஓர் ஊரை அடைந்தார்கள். ஒரு பெரிய சத்திரத்து வாசலில் வந்ததும் முதலில் சென்ற குதிரை வீரன் 'டக்'கென்று லகானைப் பிடித்து இழுத்துக் குதிரையை நிறுத்தினான். உடனே, எல்லாக் குதிரைகளும் 'டக் டக்' என்று நின்றன.

பூபதியைக் கட்டவிழ்த்துக் குதிரையிலிருந்து கீழே இறக்கி விட்டு, ஒரு வீரன் சத்திரத்தின் உள்ளே அழைத்துச் சென்றான்.

அங்கே சத்திரத்துக் கூடத்தில் உணவு பரிமாறப்பட்டுத் தயாராயிருந்தது. பூபதியைக் கூடத்துக்கு அழைத்துச் சென்று ஒரு வீரன், அவனுக்குக் கை கால், முகம் கழுவுவதற்கு ஜலம் கொடுத்துப் பிறகு அவனைச் சாப்பிடச் சொன்னான்.

பூபதியின் மனம் ஒரேயடியாகக் குழம்பிக் கிடந்தது; சாப்பாட்டில் சிறிதும் அவன் கவனம் செல்லவில்லை. ஆனால் வயிற்றுப் பசியை அவனால் தாங்க முடியவில்லை. ஆகையினால் அவன் தன் மனசைத் திடப் படுத்திக் கொண்டு சாப்பாட்டில் கவனத்தைச் செலுத்தினான்.

வடை, அப்பளம், பாயசம், கறி வகைகள் எல்லாம் ஒழுங்காய்ப் பரிமாறப் பட்டன. பூபதி நிதானமாகவும் ஒழுங்காகவும் எல்லாவற்றையும் ரஸித்துச் சாப்பிட்டான். அவன் இந்த மாதிரி நல்ல சாப்பாடு இது வரையில் சாப்பிட்டதேயில்லை. உணவு வகையில், தின்பண்டம் ஒவ்வொன்றும் அவனுக்கு வியப்பை அளித்தது. இந்த அற்புத விருந்துச் சாப்பாட்டில் தன்னை மறந்த பூபதி இப்போது தான் இருக்கும் ஆபத்தான நிலையையும் மறந்து விட்டான்.

சாப்பிட்டு முடிந்ததும் பூபதிக்கு ஒரே களைப்பாயிருந்தது. அவன் அந்தப் பெரிய சத்திரத்தில் ஒரு மூலையில் படுத்து விட்டான். அவன் படுத்தானோ இல்லையோ, மறு நிமிஷம் தன்னை மறந்து தூங்க ஆரம்பித்து விட்டான்.

பிற்பகல் சுமார் இரண்டு மணிக்கு, அந்த ராஜகுமாரனும் மற்ற வீரர்களும் குதிரைகளைத் தயார் செய்து கொண்டு மீண்டும் தங்களுடைய நெடுந் தூரப் பிரயாணத்தைத் தொடரலானார்கள்.

பூபதியைத் தேடிக் கண்டு பிடித்தார்கள். அவன் நல்ல தூக்கத்தில் இருந்தான். என்ன எழுப்பியும் எழுந்திருக்க வில்லை. ஆனால் அந்த ராஜகுமாரன் அதற்காக அவனை அங்கேயே விட்டுவிட வில்லை. அவனைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு போய்க் குதிரையில் வைத்துக் கட்டினான். பிறகு வீரர்களுக்குப் பிரயாணத்தைத் தொடங்கும்படி கட்டளை யிட்டு விட்டுக் குதிரையில் ஏறிக் கொண்டான்.

பிறகு எல்லாக் குதிரைகளும் புறப் பட்டன. ஒரு காதம், இரண்டு காதம், மூன்று காதம், நான்கு காதம் என்று குதிரைகள் வாயு வேகம் மனோவேகமாகப் பறந்தன. உயர்ந்த இனத்தைச் சேர்ந்த வேகமும் பலமும் கொண்ட சிறந்த குதிரை களானதால் அவைகள் சிறிதும் சோர்ந்து விடாமல் ஓடின.

இந்த நீண்ட நெடுந்தூரப் பிரயாணத் தில், பூபதி கண் விழிக்கவே யில்லை. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான்.

*   *   *

சட்டென்று குதிரைகள் நின்றன. 'டக் டக்' என்ற இனிமையான சத்தத்துடன் அதிர்ந்து அதிர்ந்து போய்க் கொண்டிருந்த குதிரைகள் நின்றதும் பூபதிக்குத் தூக்கம் கலைந்து விட்டது.

கண்ணை விழித்ததும் அவனுக்குப் பெரிய அதிசயம் காத்துக் கிடந்தது. உதய சூரிய னின் பொற் கிரணங்கள் படிந்து எங்கும் இன்பமயமாகக் காட்சியளித்தது. நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் பரந்து கிடந்த நீலக் கடல் 'ஓ' வென்ற இரைச்சலுடன் அலைமோதிக் கொண்டிருந்தது.

பூபதி இது வரையில் சமுத்திரத்தையே பார்த்த தில்லை. "அம்மாடி!" என்று சமுத் திரத்தைப் பார்த்த ஆனந்தத்தில் பூபதி தன்னை மறந்து கத்தி விட்டான்.

"சேனாபதி, இந்தப் பயல் மிகவும் பொல் லாத பயலா யிருப்பான் போலிருக்கிறதே!" என்று வீரர்களில் ஒருவன் கூறினான்.

ராஜகுமாரனைப் போல் தோற்றம் அளித் தவன் ஒரு சாதாரணச் சேனாபதி என்று பூபதிக்குத் தெரியவந்தது. ஏனோ அவனைக் கண்டால் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

"பூபதி, இத்தனை பெரிய சமுத்திரத்தை உன்னால் விழுங்க முடியாது. அப்படியே விழுங்கினாலும் அது ஒரேயடியாக உப்புக் கரிக்கும்! நீ தாமதிக்காமல் புறப்படு!" என்று கூறி விட்டு, அந்தச் சேனாபதி மற்ற வர்களையும் துரிதப் படுத்தினான்.

அந்த வீரர்கள் பூபதியை நடுவில் விட்டு அவனைச் சூழ்ந்து கொண்டு சென்றார்கள். சேனாபதி அவர்களுக்கு முன்னால் சென்றான்.

மனசுக்கும் உடம்புக்கும் இதத்தைக் கொடுக்கும் கடற்காற்று பூபதிக்கு மட் டற்ற மகிழ்ச்சியை அளித்தது. வெண் மணற் பரப்பில் நடந்து செல்லுவது அவ னுக்கு இன்னும் ஆனந்தமா யிருந்தது.

கொஞ்ச தூரம் சென்றதும் பூபதி ஒரு ஜனக் கூட்டத்தையும், பல படகுகளையும் பார்த்தான். வீரர்கள் பூபதியுடன் படகில் ஏறினார்கள். சேனாபதியும் இன்னும் சில ரும் இன்னொரு படகில் ஏறிக் கொண் டார்கள். உடனே அந்தப் படகுகள் அலை மோதும் ஆழ்கடலில் ஆடி அசைந்து செல்லத் தொடங்கின.

படகு இப்படியும் அப்படியும் சாயும் போது பூபதிக்குப் பயமா யிருந்தாலும், உள்ளூற மகிழ்ச்சியாயும் இருந்தது.

சிறிது நேரத்துக் கெல்லாம் படகுகள் ஒரு கப்பலை நெருங்கின. அது பிரம் மாண்டமான நீராவிக் கப்பல். அதன் புகைப் போக்கியின் வழியாகக் கரிய மேகத் திரளைப் போன்ற புகை குபுகுபு வென்று வெளி வந்து கொண்டிருந்தது. (தொடரும்)



# பொடிப் பழக்கம்

பொடி போடுகிறாயாமே?

இல்லையே அப்பா!

அடுத்த நிலை




அதற்கு அடுத்த நிலை




நான்காம் நிலை







அதற்கு அடுத்த நிலை




கடைசி நிலை






சிங்காரம் பத்து வயதுச் சிறுவனுக இருந்தபோது அந்தச் சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்தான். அவனிடம் ஒரு குதிரை யிருந்தது. அந்தக் குதிரைக்குச் சில அபூர்வ வித்தைகள் எல்லாம் அவன் பழக்கி வைத்திருந்தான். அவை பொது மக்களுக்குப் பிடிக்கலாம் என்ற காரணத்தை உத்தேசித்துச் சர்க்கஸ் கம்பெனியின் முதலாளி சங்கரன் அவனையும் அந்தக் குதிரையையும் ஏற்றுக் கொண்டார். அப்போது சிறுவன் சிங்காரம் அடைந்த மகிழ்ச்சி இவ்வளவு அவ்வளவல்ல! ஒருவாய்ச் சோற்றுக்கு அந்தச் சமயம் அவன் திண்டாடிக் கொண்டிருந்தான். அவன் மட்டுமல்லாமல் அவன் குதிரைக்கு வேறு ஆகாரம் தேடித் தர வேண்டிய பொறுப்பு அவன் தலையில் சேர்ந்திருந்தது! அந்தச் சமயத்தில் சர்க்கஸ் கம்பெனியின் முதலாளி சங்கரன் அடைக்கலம் அளித்தார் என்ருல் அவனுக்கு மகிழ்ச்சி உண்டானதில் வியப்பு என்ன இருக்கிறது?

சர்க்கஸ் கம்பெனியில் பதிவான உத்தியோகமும் தன் குதிரைக்கு நல்ல புஷ்டியான தீனியும் கிடைக்க ஆரம்பித்ததும் சிங்காரமும் அவனுடைய அருமைக் குதிரை கல்யாணியும் தேகத்தில் சதைப் பற்று பெறலாயினர். இருவரும் அழகுத் தேவியின் அருள் பாலிக்கப் பெற்றனர்.

இப்போது சிங்காரமும், அவன் குதிரையும் சர்க்கஸ் அரங்கில் தோன்றலாயினர். சில அபூர்வமான வித்தைகள் சிங்காரம் செய்து காட்டினுன். பொது மக்களின் குதூகலம் சொல்லி முடியாது. கைதட்டி, தங்கள் இருப்பிடத்தி லிருந்து எழுந்து குதூகலம் செய்த ஆஹாகாரம் வானத்தை இடித்தது! முதல் நாளே சிங்காரத்தை இவ்வளவு உற்சாகத்துடன் பொது மக்கள் வரவேற்றதைக் கண்டு சர்க்கஸ் முதலாளி சங்கரன் ரொம்பவும் சந்தோஷப் பட்டார். 'சரி, இவனை வைத்துக் கொண்டு கொஞ்ச நாட்களிலே ஒரு மாபெரும் புதையல் எடுத்து விடலாம்' என்று எண்ணினுர். அவர் நினைத்தது தவருக வில்லை. சிங்காரத்தின் பெயர் மூலை முடுக்குகள் எல்லாம் எட்டியது. சர்க்கஸில் சிங்காரமும் அவனுடைய அருமைக் கல்யாணியும் செய்து வரும் அற்புத வித்தைகளைக் காண வேண்டி மக்கள் படை திரண்டு வந்தார்கள்! சங்கரனின் பணப் பை பலூன் மாதிரி ஊதிப் பருத்துக் கொண்டே வந்தது.

சிங்காரம் தனக்கு இவ்வளவு புகழ் கிடைத்து வருவதைப் பற்றி அவன் உணர்ந்திருந்ததாகத் தெரியவில்லை. தன்னுல் முதலாளிக்குப் பணம் இவ்வளவு சேர்ந்து வருகிற உண்மையை அறிந்தவனுகவும் தெரியவில்லை. அவன் சதா சர்வதா கல்யாணியுடனேயே இருந்து வந்தான். அவன் இருப்பது கல்யாணியின் லாயத்தில்; உடுப்பது கல்யாணியின் லாயத்தில்; உறங்குவது கல்யாணியின் லாயத்தில்தான். உற்ருர் உறவினர் தாய் தந்தை யாவரும் இந்தக் குதிரைதான். வெளியுலகில் யாருடனும் பழகமாட்டான். 'பழகமாட்டான்' என்ருல் அவனுக்குப் பழகக் கூடாது என்றே, பழகத் தெரியாது என்றே எண்ணக் கூடாது. அதற்கு அவனுக்குச் சிறிதும் ஒழிவே கிடையாது; நேரமே கிடையாது! கல்யாணிதான் அவ

னுடைய எல்லா நேரத்தையும் தனதாக்கிக் கொண்டு விடுகிறானே !

இப்படியே வருஷங்கள் ஒன்றிரண்டல்ல, பத்து கழிந்து விட்டன !

.. .. ..

மனிதனுடைய மனத்தின் விசித்திரத்தை என்னவென்று சொல்வது? எந்தப் பொருள் கிட்டாதோ, அந்தப் பொருளின் மீதே மனம் தீராத ஆசை வைத்து விடுகிறது.

சர்க்கஸ் கம்பெனி முதலாளிக்குச் சாவித்திரி என்றோர் அருமை மகள். அவளுக்குத் தாய் இல்லை; தந்தை சங்கரனே தாயாக இருந்து தம் உயிருக்கு உயிராக மதித்து வளர்த்து வந்தார். இந்த அருமை மகளை மிக நல்ல பணக்காரக் குடும்பத்தில் கல்யாணம் செய்து கொடுத்து மகிழ வேண்டும் என்பது சங்கரனின் விருப்பம். தமக்குப் பிறகு புலி, கரடி, சிங்கம் இவற்றுடன் மாரடிக்கும் தொல்லையை வேறு யார் தலையிலும் சுமத்தி விட்டுப் போக அவர் விரும்பவில்லை. அதிலும் பூவை விட மெல்லியளான சாவித்திரிக்கோ, அவளுடைய கணவனுக்கோ சீதனமாகவோ, வரதட்சிணையாகவோ கொடுக்கச் சற்றும் விரும்பவில்லை. சாவித்திரியின் மன உறுதி புராணத்தில் வரும் சதி சாவித்திரியின் மன உறுதிக்குச் சற்றும் சளைத்ததல்ல என்பது அவள் தந்தைக்குப் பின்னால் தான் தெரிய வந்தது.

சிங்காரத்தின் நிலைமைக்கும் சாவித்திரியின் நிலைமைக்கும் எந்த விதத்தில் பொருத்தம்? இருப்பினும் சாவித்திரியின் உள்ளம் சிங்காரத்தையே நாடியது! சிங்காரத்துடன் அவள் காதல் பேச்சுக்கள் பேசியதே கிடையாது. இருப்பினும் அவள் மனம் அவனையே நாடியது! அதிலும் அவன் கல்யாணியுடன் கொஞ்சிக் குலாவிப் பேசும் அழகைப் பார்க்கும் போது, அவளுக்குத் தான் கல்யாணியாக இருக்க வில்லையே என்ற ஏக்கம்தான் ஏற்படும்!

கணவன், என்பவன் படித்தவனாக இருக்கலாம், மெத்தப் படித்தவனாக இருக்கலாம்; புருஷன் என்பவன் பணக்காரனாக இருக்கலாம், பெரும் பணக்காரனாக இருக்கலாம்! பெண் என்பவள் விரும்புவது அன்பல்லவா? கணவன் அன்பில்லாத, பாலைவனம் போன்ற உள்ளம் படைத்தவர்களாக வாய்த்து விட்டால் அந்தப் பெண்ணின் கஷ்டம் இவ்வளவு அவ்வளவு என்றுசொல்லித்தான் முடியுமா? அதனால் அவள் அறிந்த மட்டில் படித்தவர்களும் பணக்காரர்களும் தப்பித் தவறி ஓரளவு அன்பு பெற்றிருந்தாலும், சிங்காரத்தின் அன்பு இதயத்துக்குக் கொஞ்சங்கூட நெருங்கி வராது அவர்கள் உள்ளம் என்று சாவித்திரி தீர்மானித்தாள்.

'மேலும் எனக்குப் படிப்பிருக்கிறது; தந்தை சேர்த்து வைத்துள்ள பணம் இருக்கிறது. பின் இதை இரண்டையும் நாடி நான் ஏன் செல்ல வேண்டும்? அன்பு உள்ளம் படைத்த வரையே நாடிச் செல்வது தான் சரியல்லவா? சிங்காரத்தின் அன்பைப் பெற்றால் என்னை விடப் பாக்கியசாலி யார் இருக்க முடியும்?'

இப்படி அவள் தன் மனத்துள் எண்ணினாளே தவிர தன் தந்தையிடம் சொல்லவில்லை! அதற்குச் சந்தர்ப்பமும் துணிவும் அவளுக்கு ஏற்பட வில்லை!

சிங்காரத்துக்கோ தன்னை இப்படி ஒருத்தி நேசிக்கிறாள்; இரவும் பகலும் தன்னையே நினைந்து உருகுகிறாள் என்ற விஷயமே தெரியாது! அவனிடம் தப்பித் தவறி யாராகிலும், "உன்னிடம் அவள் அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறாள்" என்று சொன்னால், "யார்? கல்யாணிதானே?" என்றுதான் கேட்டிருப்பான். அவனால் தன் மீது கூட ஒரு மனிதப் பிறவியால் அன்பு வைக்க முடியும் என்று சற்றுக்கூட எண்ண முடியவில்லை. அவன் உலகமே கல்யாணியாகத் தான் இருந்தது. கல்யாணியை விட்டு அவனால் ஒரு கணம் கூடப்பிரிந்திருக்க முடியவில்லை.சதா அதன் நினைவே!



சர்க்கஸ் கம்பெனி முதலாளி சங்கரன், தம் மகள் சாவித்திரிக்கு உயர்ந்த பணக்கார இடத்தில் வரன் தேடினார். 'சர்க்கஸ்காரன் மகளை எவன் வாங்கிக் கொள்வான்?' என்று அலட்சியம் செய்து வந்தனர். படித்தவர்கள் முன் வரவில்லை. அப்படித் தப்பித் தவறி முன் வந்தாலும் பரம ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். அத்தகைய சம்பந்தம் செய்து கொள்ளச் சங்கரன் விரும்பவில்லை. படிப்பும் பணமும் இருந்த இடங்களில் அவமரியாதையும் ஏளனச் சொற்களும்தான் கிடைத்தன. சங்கரன் மனம் ரொம்பவும் புண்பட்டது!

தந்தையின் துயரத்தையும் ஆற்றாமையையும் கண்ட சாவித்திரி, "அப்பா, எனக்கு வரன் தேடுவதில் ஏன் இவ்வளவு சிரமப்படுகிறீர்கள்? நான் ஒரு வழி சொல்லுகிறேன். கேட்பீர்களா?" என்றாள்.

"என்ன அம்மா?" என்று கேட்டார்.

"கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?"

"இல்லை, சொல்!"

"எனக்கும் சிங்காரத்துக்கும் மணம் முடித்து வைத்து விடுங்கள்!" என்றாள்.

"என்ன சொன்னாய்? சிங்காரத்துக்கா? உன்னையா? எங்கேயோ தெருவில் கிடந்தவனை எடுத்து வளர்த்தால் அவனைப் போய்க் கட்டிக் கொள்கிறேன் என்கிறாயே! நம் அந்தஸ்து எங்கே, அவன் எங்கே? சே, சே, இந்த மாதிரியெல்லாம் பேசாதே, அம்மா!"

"சரி, அப்பா!" என்று சொல்லிவிட்டு அப்பால் போய் விட்டாள் சாவித்திரி.

ஆனால் அவள் மனத்துக்குள் சிரித்துக் கொண்டாள். 'அப்பா, தனக்கு ரொம்பவும் கௌரவம் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். 'சில ஜன்மங்களுக்குப் பட்டால் கூடத் தெரியாது' என்பதற்கு அப்பாவே கண் எதிரே காணும் உதாரணம். தனக்கு இன்னும் சமுதாயத்தில் அந்தஸ்து, கௌரவம் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். என்னைப் பெற்ற தாய் ஒரு நாடோடி மாது என்பது உலகம் அறியும். உலகம் இன்னும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டுதான் இருக்கிறது. ஆனால் அப்பா மறந்து விட்டார் போலிருக்கிறது. இல்லையென்றால் சிங்காரத்தைப் பற்றி அப்படிப் பேசுவாரா? சிங்கா



ரத்தை வைத்துக் கொண்டு இவ்வளவு பணம் பண்ணிவிட்டு, கொஞ்சம் கூட நாக்கில் நரம்பில்லாமல், உள்ளத்தில் நன்றி என்பது இல்லாமல் பேசுகிறார். இதற்கெல்லாம் காரணம், பணம் அவரிடம் அபரிமிதமாகச் சேர்ந்து விட்டது! அப்பப்பா! இந்தப் பணம் மனுஷனை என்ன பாடெல்லாம் படுத்துகிறது' என்று பலப்பல எண்ணினாள் சாவித்திரி.



பிப்ரவரி முதல் வாரம் ராஜன்பாபு இல்லத்தில் ஒரு வைபவம் நடைபெற்றது. நடன ஆசிரியர் திரு பக்கிரிசாமியின் சிஷ்யைகளான சுசீலா, யமுனா, கமலா மூவரும் பரத நாட்டியம் ஆடி ஜனாதிபதியை மகிழ்வித்தனர். படத்தில் ஜனாதிபதிக்கு இரண்டு பக்கங்களிலும் பரத நாட்டியமாடிய குமாரிகளைக் காணலாம்.

சிங்காரம் மெள்ள எழுந்தான். கண்களில் கண்ணீர் ஆறாகப் பிரவாகமெடுத்தது. நெஞ்சம் விம்மியது; தொண்டையை அடைத்தது. அதனோடேயே தட்டுத் தடுமாறி, "ஐயா, கொஞ்ச நாட்களாகவே என்னைக் கண்டால் உங்களுக்குப் பிடிக்கவில்லை என்பது அறிந்து கொண்டேன். நான் உங்களிடம் இருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் அப்போதே 'நீ இதை விட்டு வெளியே போ!' என்று சொல்லியிருந்தீர்களானால் போயிருப்பேன். இவ்வளவு கூத்தும் கலாட்டாவும் வேண்டியதே இல்லை. ஐயா! நான் வருகிறேன்! இத்தனை நாள் என்னையும் என் குதிரை கல்யாணியையும் ஆதரித்ததற்கு என் மனமார்ந்த நன்றி" என்று சொல்லிவிட்டு உள்புறமாக வந்தான்.

"சிங்காரம்! உன் நடத்தை எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!" என்றார் சங்கரன் கோபமாக.

இப்படிச் சென்ற நான்கு மாதங்களாகச் சிங்காரத்தை அடிக்கடி கண்டித்து வந்தார். சிங்காரத்துக்கு முதலாளியின் மனம் இப்படிக் கொஞ்ச நாட்களாகத் தன் மேல் காரணமின்றி அடிக்கடி எரிந்து விழுவதன் நோக்கம் புரியவில்லை. தான் அப்படி என்ன தவறு செய்து விட்டோம் என்பதும் அவனுக்குப் புரியவில்லை. ஆனால் அடிக்கடி அவனைக் கடிந்துகொண்டே வந்ததால் அன்று அவனுக்குப் பொறுக்க முடியாமற் போய் விட்டது!

"ஐயா! என் நடத்தையில் என்ன தவறு கண்டுவிட்டீர்கள்? நான் என்ன தவறுதலாக நடந்து கொண்டு விட்டேன்; தயவு செய்து சொல்லுங்கள்!" என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகக் கேட்டு விட்டான்.

இத்தனை நாள் வாய் திறவாத அடிமையாக இருந்த சிங்காரம் இன்று திடீர் என்று குறுக்குக் கேள்வி கேட்டது சங்கரனைத் தன் நிலை இழக்கச் செய்துவிட்டது. அளவு கடந்த ஆத்திரம் பொங்கி வந்தது. "என்ன! என்னை எதிர்த்துப் பேசுகிறாயா! அவ்வளவு துணிச்சல் உனக்கு வந்து விட்டதா? யூ கெட் அவுட்!" என்று கத்தி, அவன் கழுத்தில் கையைப் போட்டு நெட்டித் தள்ளினார். அவன் சுருண்டு அப்பால் போய் விழுந்தான்!

சங்கரனுடைய உச்சஸ்தாயியில் எழும்பிய குரலைக் கேட்டதும் அந்தச் சர்க்கஸ் கூடாரத்தில் இருந்தவர்கள் அத்தனை பேரும் அவரவர்கள் இருந்த இடத்தில் அப்படியே பிரமை பிடித்து நின்றார்கள். இம்மாதிரி கூப்பாடுகள் அந்தச் சர்க்கஸ் கம்பெனியில் சர்வ சகஜமாக நடக்கும். ஆனாலும் அவர்களால் 'திக்பிரமை' கொள்ளாமலிருக்கமுடியவில்லை.

"எங்கே வருகிறாய்! வெளியே போ!" என்று இரைந்தார் சங்கரன்.

"என் குதிரையை லாயத்திலிருந்து அவிழ்த்துக் கொண்டு போகிறேன், ஐயா! அவ்வளவுதான். வேறு ஒன்றும் எடுத்துக் கொள்ளவில்லை!" என்றான் சங்கரன்.

"என்ன! உன் குதிரையா? அவ்விதம் யார் சொன்னது! அது கம்பெனியின் குதிரை! குதிரையின் மீது கையை வைத்தாயோ சுட்டுக் கொன்று விடுவேன்! வெளியே போ!" என்று மீண்டும் இரைந்தார் சர்க்கஸ் கம்பெனி முதலாளி சங்கரன்.

இப்பொழுதுதான் சிங்காரத்துக்கு மண்டையில் நூறு சம்மட்டியால் ஒரே சமயத்தில் ஓங்கி யடித்தாற்போல் இருந்தது.

"கல்யாணி கம்பெனியின் குதிரையா? கல்யாணி கம்பெனியின் குதிரையா?" என்று இரண்டு மூன்று தரம் சொன்னான் — இல்லை — அவன் வாய் முணுமுணுத்தது. அடுத்த கணம் நெடுமரம்போல் தரையில் விழுந்து மூர்ச்சையுற்றுப் போனான்.

** ** **

மறுபடியும் கண் விழித்துப் பார்த்த போது சிங்காரம் தான் ஆஸ்பத்திரியில் இருப்பதை யுணர்ந்தான்.

கல்யாணியின் நினைவு வந்து விட்டது. "கல்யாணி! கல்யாணி! என் அருமைக் கல்யாணி!" என்று இரைந்து கொண்டே எழ முயற்சித்தான். அவனால் காலையோ, கையையோ இம்மிகூட அசைக்க முடியவில்லை. ஆனால் அவன் வாய் மட்டும், "கல்யாணி! கல்யாணி!" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

"மிஸ்டர், இப்படிச் சத்தம் போடாதீர்கள்! உங்களுக்கு ஜுரம் அதிகமாகிவிடும்! பேசாமல் தூங்குங்கள்" என்று எச்சரித்தாள் ஆஸ்பத்திரி நர்ஸ்.

"என்னை என் கல்யாணியின் பக்கத்தில் கொண்டு போங்களேன்" என்று மறுபடியும் பலமாகக் கத்தினான்.

"ஒழுங்குதான், போ!" என்றாள் நர்ஸ்.

பிறகு அவனுக்குத் தூக்க மருந்து ஊசியில் குத்திக் கொடுத்தார்கள். அவன் மருந்தின் வேகத்தினால் தூங்கிப் போனான்.

சர்க்கஸ் கம்பெனி வாயிலில் சிங்காரம் மூர்ச்சையுற்றவுடனே அவனை ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். ஆஸ்பத்திரியில் அவனுக்குக் கடும் ஜுரம் கண்டது. மூர்ச்சையுற்ற நிலையும் ஜுர வேகமும் சேர்ந்து அவன் கண்களைத் திறக்க விடாமல் செய்தன. பிறகு அது 'டைபாய்டு' ஜுரம் என்று டாக்டர்கள் முடிவு கட்டினார்கள்.

எனவே, சிங்காரம் ஆஸ்பத்திரியில் இருபது நாட்களுக்கு மேல் இருக்க வேண்டியதாகி விட்டது. அவனுக்கோ, உற்றார் உறவினர் தாய் தந்தை யாரும் கிடையாது. டாக்டர்களும், நர்ஸுகளும்தான் அவனைக் கவனித்து வந்தனர். தினம் மாலை சாவித்திரி மட்டும் ஆஸ்பத்திரிக்கு வந்து அவனைப் பார்த்து விட்டுப் போவாள்.

தினந்தோறும் சாவித்திரியினிடம் கல்யாணியின் க்ஷேம நலன்களை விசாரித்து வருவான் சிங்காரம்.

கல்யாணி, அவனைப் பிரிந்ததில் ரொம்பவும் சோர்ந்து காணப்பட்டாலும் மொத்தத்தில் நன்றாகவே இருக்கிறது என்று சொல்லி வருவாள் சாவித்திரி.

இந்த வார்த்தைகளைக் கேட்டுத்தானோ என்னவோ அவன் உடல் நிலையும் தேறி வந்து கொண்டிருந்தது.

ஒரு நாள் சிங்காரத்தைக் கவனித்து வந்த நர்ஸ் "இவரு எப்போது பார்த்தாலும், 'கல்யாணி! கல்யாணி' என்று ஜபம் செய்றாரே. அந்த அம்மா இவருடைய கட்டின பெண்டாட்டியோ? இல்லை—காதலியோ?" என்று சாவித்திரியைத் தனியாகப் பார்த்த போது கேட்டாள்.

சாவித்திரி, "கட்டின பெண்டாட்டிக்கும் மேலே, காதலித்த காதலிக்கும் மேலே..." என்று சிரித்துக் கொண்டே அவளுக்குப் பதில் சொல்லி விட்டுப் போனாள்.

** ** **

இரண்டு நாட்களுக்குப் பிறகு, நர்ஸ் ரொம்பவும் அவசர அவசரமாகச் சிங்காரத்தினிடம் வந்தாள். "நேற்றைக்கு ராத்திரி சர்க்கஸ் கொட்டகையிலே நடந்த சமாசாரம் உங்களுக்குத் தெரியுமா?" என்றாள்.

"என்ன ?" என்று கேட்டான்.

"அந்தக் கொட்டகையிலே ஒரு குதிரை பெரிய பெரிய வித்தைகள் எல்லாம் செய்து வந்ததாம். அதைப் பழக்கின குதிரைக்காரர் ஏதோ காரணத்தினாலே சர்க்கஸ் முதலாளியிடம் சண்டை போட்டுக் கொண்டு வெளியேறி விட்டார். அது முதற் கொண்டு அந்தக் குதிரை ரொம்பச் சண்டித்தனம் பண்ண ஆரம்பிச்சுதாம். ஆளுங்க மேலே எல்லாம் வேணும் என்று பாயுமாம். குறுக்கே பெஞ்சு நாற்காலி போட்டிருந்தால் முன்னே எல்லாம் தாவிக் கொண்டு போகும். இப்பொழுது வேண்டுமென்று இடித்துக் கொண்டு போகுமாம். அதுவும் நேற்று ராத்திரி அது ஒரு வித்தைகூடச் சரியாகப் பண்ணவில்லையாம்! சர்க்கஸ் முதலாளிக்குச் சொல்லி முடியாத கோபம் வந்து விட்டதாம். அதை அங்கேயே தம் கைத் துப்பாக்கியால் ஜனங்கள் பார்க்கச் சுட்டுக் கொன்று விட்டாராம்......" என்று சொல்லிக் கொண்டே வந்தாள்.

இதுகாறும் பொறுமையுடன் கேட்டு வந்த சிங்காரம் "கொன்று விட்டானா உன்னை, கல்யாணி! ஆ! மகாபாவி! உன்னைக் கொன்று விட்டானா கல்யாணி! உனக்குக் கண் தெரியாது; வெறும் குருடி என்பது அவனுக்கு என்ன தெரியும்! உனக்குக் கண்ணாக இருந்து இத்தனை நாள் இத்தனை வித்தைகள் செய்யப் பழக்கி வைத்தேன்! கல்யாணி, இனி எனக்கு இவ்வுலகத்தில் வேலை இல்லை. நானும் உன்னுடன் வருகிறேன்!" என்று கூறிக் கண்களை மூடினான்.

அன்று மாலை சிங்காரத்தைப் பார்க்க வந்த சாவித்திரி, இச் செய்தியைக் கேட்டுச் சிலை போல் நின்றாள்.

அப்பொழுது அவள் உள்ளத்தில் பலப்பல எண்ணங்கள் அலைமோதின.

"சிங்காரம், உன் குதிரைக்குக் கண்ணாக இருந்து அதை அற்புதமான வித்தைகளைச் செய்யப் பழக்கினாய்! மகா ஜனங்களின் பேரன்பையும் பெற்றாய்! இதற்கெல்லாம் காரணம் நீ கல்யாணிக்குக் கண் பார்வை அளித்ததுதான். ஆனால் நீ உன் சொந்தப் பார்வையை இழந்து விட்டாய்! கண் இருந்தும் என் காதலைக் காணாமலே போய் விட்டாய்......!" என்று எண்ணினாள். அவள் நெஞ்சின் ஆழத்திலிருந்து நீண்ட பெருமூச்சு வெளிப் பட்டது.

## கதகளி சங்கீத மகா வித்துவான் கோஷ்டி

கேரளத்தின் கலைச் செல்வமான கதகளி நடனத்தை முன்பு கேரள மக்கள் மாத்திரமே அனுபவித்து மகிழ்ந்து வந்தார்கள். ஆனால் இன்றோ, கதகளி நடனத்தின் சிறப்பு இந்தியா முழுவதும் வியாபித்திருக்கிறது. அடிப்படையான அம்சங்களில் கதகளி சங்கீதம் கர்நாடக சங்கீதத்திலிருந்து வேறுபட்டதல்ல. எனினும் கர்நாடக சங்கீதத்தைப் போல் கதகளி சங்கீதத்தில் ஸ்வரங்களுக்கும் சங்கதிகளுக்கும் அதிகப் பிராதான்யம் கொடுக்கப்படுவதில்லை; சாகித்தியத்துக்கே அதாவது வார்த்தைகளுக்கே முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. கதகளி நடிகர்களின் அபிநயங்களின் மூலம் கதையை எல்லோரும் தெளிவாக அறிந்து கொள்வதற்குப் பின்பாடகர் சாகித்தியத்தில் விசேஷ கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. கதகளி சங்கீதத்தில் மத்தளம், செண்டா இந்த இரண்டு தாள வாத்தியங்களைத் தவிர வேறு எந்த வாத்தியமும் உபயோகிக்கப்படுவதில்லை. பாடகரின் கையில் இருக்கும் சேமக்கலம் ஏககாலத்தில் கருவியாகவும் தாளமாகவும் அமைகின்றது. கதகளி சங்கீதத்தின் பண்டையப் பெருமை குன்றாதவாறு அதில் பல அபிவிருத்திகளைச் செய்து புதிய பாணியைக் கையாளும் மகா வித்துவான் ஸ்ரீ எம். ஆர். வெங்கட கிருஷ்ண பாகவதரையும், மத்தளம், செண்டா வாசிக்கும் வித்துவான்களையும் படத்தில் காணலாம்.



# சோப்புத் தொழில் சரித்திரத்தில் பிற்போக்கா?

**காந்திஜீ சொன்னார்—**

"அன்னிய நாட்டு மூல தனத்தையோ அல்லது அன்னிய நாட்டு தொழிலறிவையோ, அத்தகைய வசதிகள் இந்தியாவில் கிடைக்காவிட்டால் அல்லது அவைகள் நமக்கு அத்தியாவசியமாக இருந்தால், பயன்படுத்திக் கொள்வதைப்பற்றி நான் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் ஒரே ஒரு ஷரத்து என்னவெனில் அத்தகைய மூல தனமும் தொழிலறிவும் முற்றிலும் இந்தியர்களின் கட்டுப்பாடு, அதிகாரம், நிர்வாகம் இவைகளுக்குக் கீழ்ப்பட்டிருக்க வேண்டும்; மேலும் இந்தியாவின் நலனை உத்தேசித்து உபயோகிக்கப்பட வேண்டும்."

இந்நூற்றாண்டு ஆதியில் முதலாவதாக ஆரம்பிக்கப்பட்ட **முற்றிலும் சுதேசி மயமான** சோப்புத் தொழில் நம் தேசத்தின் சகல தேவைகளைக் காட்டிலும் அதிகமாக உற்பத்தி செய்யும் நிலையிலிருக்கிறது. அது பாதுகாப்பை கேட்டதில்லை. ஆனால் எடுத்துக் காட்டாக விளங்கும் இந்த சுதேசித் தொழில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஓர் ராக்ஷஸ சர்வதேச இணைப்பு ஸ்தாபனத்துடன் போராடிக்கொண்டிருக்கிறது. ஏனெனில் அப்பெரிய ஸ்தாபனம் இப்பொழுது தன் வசமுள்ள 50 சத விகிதத்திற்கு அதிகமான வியாபாரத்தை — குடிசைத் தொழில் வியாபாரம் உள்பட — வெகு சீக்கிரம் நேரிடையாகவோ அல்லது அதற்கு முரண்பாடான உபாயத்தாலோ பெருக்கக்கூடும். ஆகையால் இவ் விஷயத்தைப் பற்றி உடனே விசாரணை செய்யுமாறு நாங்கள் கேட்டுக் கொள்கிறோம்.

---

| | | |
|---|---|---|
| அஸ்கோ ஸ்பெஷல் மற்றும் பார் | காமினியா மற்றும் நில்பஹார் டாய்லட் | ஆப வின்னிர் கார்பாலிக் மற்றும் வாஷிங் |
| ஏ. எஸ். பி. ஸ்பெஷல்— ஷேம்பாய் | காந்தி — 777 பார் | ஸ்வைகா மற்றும் நவ்ராஜ் ஹவுஸ் ஹோல்ட் |
| கோத்ரெஜ் நெ.1—"வதனி" | மலபார் லிமிடெ மற்றும் க்னோசி | டிரோஸ்—"டாப்" வாஷிங் |
| கோல்டன் ஸாண்டல்வுட்— நிக்ஸால் | மார்கோ — ஸாப்ஸால் | டெக்னோ ஸாண்டல் மற்றும் பார்கள் |
| ஹமாம் — 501 | மைசூர் ஸாண்டல் | வஸந்த் டாய்லட் மற்றும் பார் |
| ஜிமானி ஸ்னோ மற்றும் ஜெனிஸின் சோப் | நந்தி வாஷிங் | வீர்மணி மஞ்ஜித் மற்றும் ஜோதி |
| கைலாஸ் ஸாண்டல் — 108 வாஷிங் | பிரிபெக்ட் | |

**உயர்ந்த ரக டாய்லட் மற்றும் வாஷிங் சோப்புகளின் பெயர்களடங்கிய இந்த ஜாபிதாவை வைத்துக் கொள்ளுங்கள்**

| | | | |
|---|---|---|---|
| மற்றும் | இந்து | கோல்டன்.. | விக்டர் ஆன்டிசெப்டிக் |
| அம்ருத் ஆயில் மில்ஸ் | ஜே. கே. | மித்ரா.. | மனஸுகலால்ராம் நாராயண் |
| பங்கலக்ஷ்மி | கல்கத்தா.. | ஜாதவ்பூர்.. | மீரா கெமிகல்ஸ் |
| பிரார் ஆயில் இண்டஸ்ட்ரீஸ் | விடி.. | ..சோப் வொர்க்ஸ் | மாடல் |
| பாரத் வனஸ்பதி | தேசி.. | ஜான் பாட்டர்ஸன் | மூர்லே |
| பாரத்ஸ்டார்ச் அண்டு கெமிகல்ஸ் | கங்கா.. | கல்பகா | பீ. கே. ஸென் |

தென் இந்திய சோப்பு தயாரிப்பவர் சங்கம் (இணைக்கப்பட்டது).

---

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு; ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு.

**பொருளாதார சுதந்திரம் பெற, தேசியத் தொழிலை ஆதரியுங்கள்—மற்றும் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்வதுடன் வேலையும் அளியுங்கள்.**

**I** இந்தியன் **S** சோப் அண்டு **T** டாய்லட்ரீஸ் **M** மேக்கர்ஸ் **A** அஸோஸியேஷன்



வின்கோலா டானிக் நீடித்த நோய்களுக்குப் பிறகும், களைப்பிலிருந்தும் சீக்கிரமாக பலத்தை மீட்டுத் தருகிறது. சாப்பிட இனிமையான இது பசியையும் ஜீரண சக்தியையும் தந்து, எடையை அதிகமாக்குகிறது.

**வின்கோலா**
தேர்ந்தெடுத்த
டானிக்



ஸ்டாண்டர்ட் பார்மஸூடிகல் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா

PSSV_16

## அரித்து, எரிந்து, கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடேர்ம் (Nixoderm) கண்டு பிடித்தது முதல் யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டி ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடேர்ம் (Nixoderm) உதவியால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அநாயாசமாக வைத்துக்கொண்டு பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் தராதீர்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடேர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை தாக்குகிறது. நிக்ஸோடேர்ம் (Nixoderm) மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப் போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடேர்ம் (Nixoderm) மற்றதைவிட சீக்கிரம் வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி—நாடிய வைத்தியம் கிடைத்ததை உணர்வீர்கள். நிக்ஸோடேர்ம் (Nixoderm) ஆயிரக்கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி


BEFORE


AFTER

புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப்பிறகு நிக்ஸோடேர்ம் (Nixoderm) உபயோகித்தேன். 10 நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்."

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாகாதவரை நிக்ஸோடேர்ம் (Nixoderm) மதிப்பை இழக்கிறது. இன்றே நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் காண ஆச்சரியப்படுவீர்கள். ஒரு வாரத்துக்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்களித்த உத்தரவாதமே உங்களுக்கான உறுதி.




கே. ஆர். கௌசல்யா

எங்கும் காரிருள் கவிந்து கொண்டிருந்தது. ஊர் ஓசையடங்கிவிட்ட இரவின் அமைதியைக் கலைத்துக் கொண்டு 'ஙொய்' என்று ரீங்கார மிட்டுக் கொண்டிருந்தது சுவர்க் கோழி. எங்கோ தூரத்தில் நாய் ஒன்று ஊளையிடும் சப்தம் இடையிடையே கேட்டுக் கொண்டிருந்தது. கூடத்தில் ஏற்றி வைக்கப்பட்டிருந்த விளக்கின் ஒளி காற்றில் ஆடி அசைந்து துடித்துக் கொண்டிருந்தது. தாழ்வாரத்தில் விரிக்கப்பட்டிருந்த பாயில் கித்தான் தலையணையைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருந்த மங்களம் ஆழ்ந்த நித்திரையிலிருந்தாள்.

திடுக்கிட்டுக் கண்ணை விழித்துப் படுக்கையிலின்று வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் மங்களம். பீதி நிறைந்த கண்களால் சுற்றுமுற்றும் பார்த்த அவள் திகைப்புடன் விழித்தாள். எந்த இருமல் ஒலியைக் கேட்டுக் கேட்டுச் சலித்து, 'அது ஓய்ந்து நானும் ஒருநாள் இருப்பேனா' என்ற அளவுக்கு அவள் ஏங்கினாளோ, அதைக் கேட்டுக் கேட்டுப் பழக்கத்தின் காரணமாக இன்று கனவிலும், நினைவிலும் வந்து அவளை உலுக்கும் அந்த ஒலிக்குக் காரண கர்த்தாவான அவள் கணவர் கணபதி உலகைவிட்டு மறைந்து போய் நாட்கள், மாதக் கணக்குகளாகி ஓடிக் கொண்டிருந்தன. ஆம்! சற்று முன் கேட்ட இருமல் ஒலி அவளுடைய வெறும் பிரமைதான்.

அவள் மனம் துயரத்தினால் விம்மிற்று. கண்களில் 'கர, கர' வென்று கண்ணீர் சுரந்து நின்றது. 'சடா'ரென்று பாயில் விழுந்து தலையணையில் முகத்தைப் பதித்துக் கொண்டு ஓசை கேட்காமல் விம்மினாள் மங்களம்.

.. .. ..

பருவத்தின் பூரண எழிலுடன் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்த மங்களத்தின் கரம் பற்றிய போது கணபதி, 'அவளுக்கு நான் சளைத்தவனில்லை' என்பதுபோல் வாலிபத்தின் மிடுக்குடன் நிமிர்ந்து நடக்கும் கட்டிளம் காளையாக விளங்கினான். அந்த மனமொத்த ஜோடிகளின் இன்பம் பொங்குகின்ற வாழ்க்கையின் அடையாளமாக மூர்த்தி அவதரித்த போது, அவர்கள் இன்பத்தில் பொறுமை கொண்டு விதி சிரித்தது. வெறும் சாதாரண ஜலதோஷம், இருமல் என்று ஆரம்பித்த வியாதி கணபதியை 'டபிள் நிமோனியா'வில் கொண்டு வைத்தது. 'பிழைத்ததே புனர்ஜன்மம்' என்னும்படியாகப் பெரிய படுக்கை போட்டு விட்டுக் குச்சி போன்ற உடலுடன் அவன் படுக்கையினின்று எழுந்தபோது மங்களம் துயரம் தாளாமல் விம்மினாள். நாளாவட்டத்தில் தேறி உடல் பழைய நிலைமைக்கு வந்து விடலாம் என்ற அவர்கள் நம்பிக்கையில் மண் விழுந்தது. குளிர் காலம் வந்தால் ஒரு தடவை பெரிய படுக்கையாகப்போடுவது என்பது வழக்கமாகி, அதினிடையிலும் ஆபீஸில் வேலை செய்து உழைத்து, குடும்பம் நடத்திப் பையன் மூர்த்தியும் வளர்ந்து, படித்து எல்லாம் காலக்கிரமத்தில் நடக்கத்தான் செய்தது, மங்களத்தின் மாங்கல்யப் பலத்தால்.

காலச் சக்கரம் சுழன்று அநேக ஆண்டுகளை அடித்துத் தள்ளியது. முன்போல் தாக்குப் பிடித்து வேலை செய்ய முடியாமல் திணறும் தம் உடல் நிலைமையை டாக்டரிடம் கணபதி காட்டிய போது அவர், க்ஷயரோகம் நுரையீரலில் பலமாகப் பற்றி வளர்ந்து வந்திருப்பதாகக் கூறியபோது, அவர் தலையில் எரிமலையே புரண்டு விழுந்து விட்டது போன்ற பிரமை ஏற்பட்டது. இனிமேல் என்ன வைத்தியம் செய்து கொண்டாலும் அது அவ்வப்போதைய தாற்காலிக சாந்திக்குத்தான் என்று கூறினார் அவர். வேலையிலிருந்து விலக வேண்டியதற்குக் குறிப்பிடப்பட்டிருக்கும் காலத்திற்கு, வயசுக்குச் சில வருடங்களுக்கு முன்பே தாமாகவே வேலையினின்றும் ஓய்வு பெற்றுக் கொண்டு விட்டார் கணபதி. மூர்த்தியின் சம்பாத்தியம் குடும்பம் நடத்துவதிலும், கணபதி சம்பாதிக்கும் காலத்தில் பாங்கில் சேர்த்து வைக்கப்பட்டிருந்த தொகை அவர் வைத்தியத்திலும் கரைந்து வந்தன.

''மூர்த்தி...! எந்த நிமிஷத்தில் நான் மண்டையைப் போட்டு விடுவேனோ! என் கண் குளிரப் பார்க்கச் சீக்கிரம் விவாகம் செய்து கொண்டு விடு!'' என்று மகனிடம் வேண்டினார் கணபதி. அதன்படியே விரைவில் ஒரு சுபமுகூர்த்தத்தில்

அவனுடைய தர்ம பத்தினியானாள் சங்கரி. சங்கரி கால் வைத்த வேளை மூர்த்திக்கு வேலை உயர்ந்தது. வீட்டிலே ஓரளவு அமைதி நிலவியது.

என்றைக்கு வேலையை விட்டுவிட்டு, கணபதி 'வியாதி' என்று படுக்கையில் விழுந்தாரோ, அன்றே மங்களம் நித்திரா தேவியைப் பலவந்தமாகத் தன்னிடமிருந்து விரட்டி விட்டாள். இரவு பகல் பாராமல் கணபதியின் படுக்கையறையிலேயே கிடந்து, வேளை தவறாமல் மருந்து கொடுத்து, எழுந்திருக்க, உட்கார, சாய்ந்து கொள்ள உதவி செய்து உடலை வாட்டி வதைத்துக் கொண்டாள் மங்களம். மாமியாருக்கு உதவியாய்ச் சங்கரி அவ்வப்போது மாமனாருக்குச் சிசுருஷைகள் செய்து ஒத்தாசையாக இருந்ததுகூடப் பொறுக்கவில்லை விதிக்கு. 'மசக்கை ஆசை' என்று பிறந்தகம் சென்று வந்த சங்கரி அடியோடு மாறி விட்டிருந்தாள், பெற்ற தாயின் உபதேசத்தால்!

சதா சர்வ காலமும் நோயில் உழன்று கொண்டிருக்கும் கணபதியருகில் இருந்து வேலை செய்தால் சங்கரிக்கும் அந்த வியாதி வந்துவிடும். இனி அவர் அருகேயும் நாடக்கூடாது என்று கடுமையாக எச்சரித்திருந்தாள் அவள். தாயின் உபதேசத்துக்கு அணுவளவும் பிசகாமல் நடந்தாள் சங்கரி. அவளுடைய புதிய மாறுதல் மங்களத்தின் நெஞ்சைப் புண்ணாக்கியது. ஆயினும் சங்கரியின் பக்கம்தான் தெய்வம் இருந்தது. திடீரென்று மூர்த்திக்குச் சென்னைக்கு மாற்றலாயிற்று. "நீ இல்லாமல் நான் என்ன செய்வேனடா குழந்தை! எனக்குத் தைரியம் சொல்லக்கூட ஆளில்லையே!" என்னும் மங்களத்தின் முறையீட்டுக்கு "நீ என்ன சின்னக் குழந்தையா அம்மா! மாசாமாசம் பணம் அனுப்பி விடுகிறேன். அதைவிட என்னால் வேறு என்ன செய்ய முடியும்!" என்று கூறிவிட்டு மங்களத்தின் கண்ணீருக்கிடையே ஊருக்குப் புறப்பட்டுச் சென்று விட்டான் மூர்த்தி.

அருவருப்புப் பாராமல் தன்னருகிலேயே தன்னந்தனியாளாய் இருந்து, கண் விழித்து, உடலைச் சக்கையாய்ப் பிழிந்து வேலை செய்யும் தம் பத்தினியைக் கண்டு கண்ணீர் உதிர்த்துக் கலங்கினார் கணபதி. "மங்களம்! நீ தெய்வப் பிறவி!" நெஞ்சைப் பிளந்து விடும் போன்று கிளம்பும் இருமல்களுக்கு இடையே — துயரத்துக்கிடையே அவர் திரும்பத் திரும்பச் சொன்ன சொல் இது ஒன்றுதான். இதனிடையில்தான் மூர்த்தி ஒரு கடிதம் எழுதி யிருந்தான்.

"......அருகே உள்ளவருக்கு அதி விரைவில் பற்றிக் கொள்ளும் கொடிய தன்மை வாய்ந்த வியாதி வந்திருப்பதால் உங்களை இங்கே அழைத்துக்கொள்ள முடியவில்லை. என்ன செய்வது! மனங் கலங்காதே......" என்று அவன் எழுதியிருந்ததைப் படித்தபோது மங்களம் 'கோ'வெனக் கதறிவிட்டாள். கடிதத்தைக் கணவனிடம் கூடக் காட்டாமல் மறைத்து விட்டாள். 'வியாதி தொத்திக் கொள்ளுமாம். அல்லும் பகலும் அவரருகிலேயே இருந்து உழைக்கிறேன். எனக்கு என்ன வந்து விட்டது இப்போது! எப்படிப்பட்ட கடின நெஞ்சம்!" என்று எண்ணி எண்ணி மாய்ந்து போனாள் மங்களம். எத்தனையோ பொறுமையுடன், புன்முறுவலுடன் கணவனுக்குப் பணிவிடைகள் செய்துகொண்டு வந்த மங்களத்தின் மனப்போக்கில் திடீரென்று தான் அந்த மாற்றம் கண்டது.

விவாகமாகிய பின் அவள் கணவன் உலகத்தாரைப் போல் வாலிப மிடுக்குடன் ஓடியாடி அவளுடன் ஆனந்த வாழ்க்கை நடத்தியது ஏதோ சொற்ப காலம்தான். 'எப்போதோ!' என்று சொல்லும்படியாக ஒரு கனவு கண்ட மாதிரி மறைந்து விட்டது அது. எழுந்திருக்கவும், உட்காரவும் கூடப் பிறர் உதவியைத் தேடி, படுக்கையில் விழுந்துள்ள நோயாளிக் கணவர் கணபதியின் அருகில் கன்னத்தில் ஊன்றிய கையுடன் அவள் உட்கார்ந்திருக்கும் நிலைதான் மங்களத்தின் கண்களெதிரே தெற்றெனப் புலப்பட்டது. கணபதி இனி என்னதான் இருந்தாலும் அதிக நாட்கள் இருக்கப் போவதில்லை. இருக்கும் சொற்ப காலமும் தண்ணீர் போன்ற பணச் செலவு. அதுவும் தாற்காலிக சாந்திக்குத் தான். அவர் ஒரு காலைச் சுற்றிக் கிடக்கும் பாம்பாக இருப்பதனால்தான் அதை உதறிக்கொண்டு தன் பிள்ளையிடம் அவளால் செல்ல முடியவில்லை என்பதை எண்ணி எண்ணி மனம் பொருமினாள் மங்களம்.

"......மங்களம்! என்னை மணந்ததால் ஒரு சுகமும் காணவில்லை நீ! அடுத்த ஜன்மத்திலாவது உன் வாழ்வு பொலிவு பெற்று விளங்கவேண்டும். ஆயுசு முழுவதும் கல்லுக்குண்டாய் இருந்து உன் வாழ்க்கையைச் சோபிக்கச் செய்யும் கணவன் உனக்கு வந்து வாய்க்கட்டும்!" தடுமாறும் குரலினின்றும் வெளிவந்த இந்தக் கடைசி வார்த்தைகளைக் கூறிவிட்டு, நெஞ்சைப் பிளந்த இருமலொன்றுடன் ஆயாசத்துடன் கண்களை மூடிக் கொண்டு விட்டார் கணபதி.

மங்களம் தலையிலும், முகத்திலும் அறைந்து கொண்டு புலம்பினாள். தந்தி கண்டவுடன் பிள்ளை

மூர்த்தி வந்திருந்தான் குடும்பத்துடன். அப்பாவின் கடைசிக் காரியங்களைக் கிரமமாக நடத்தினான்.

"அம்மா! நீ இனி தனியே இந்த வீட்டில் இருக்க வேண்டாம்! என்னுடன் வந்துவிடு!" என்று அவளை மூர்த்தி தன்னுடன் அழைத்து வந்து விட்டான்.

சென்னைக்கு வந்து தன் பிள்ளை, நாட்டுப் பெண்ணிடம் வாழ்க்கை நடத்த ஆரம்பித்தாள் மங்களம். இப்போது அவள் நன்றாக, நினைத்த போது தூங்கலாம். அவளைத் தடுப்பார் யாருமில்லை. நிம்மதியாய்க் கோயில், குளம் சென்று வரலாம். அவள் காலைச் சுற்றிக் கொண்டிருந்த பாம்பு தானே அவளை விட்டு விலகிச் சென்று விட்டது. ஆனால் மங்களத்துக்கு இப்போதும் தூக்கம் வரவில்லை. அவள் உள்ளத்தில் இன்னமும் எள்ளத்தனை நிம்மதி இல்லை. காரணம்? அன்று காலை பூஜையை முடித்துக் கொண்டு வெளியே வந்த மங்களத்தின் காதுகளில் கோபத்துடன் மூர்த்தி இரைந்து கொண்டிருந்த குரல் கேட்டது. "படிக்கிற பையனுக்கு இன்னும் தூக்கம் என்ன! மணி எட்டடிக்கப் போறது! எல்லாம் நீ கொடுக்கும் செல்லம்தான்!" என்றான் சங்கரியை.

"இந்தப் பனியிலே, இத்தனை காலையில் குழந்தை எழுந்து என்ன செய்யணுமாம்!" என்று ஏதேதோ பதிலுக்குக் கோபத்துடன் முணு முணுத்தாள் சங்கரி.

"என்டாப்பா! குழந்தையை ஏன் வையறே! இதோ நான் போய் அவனை எழுப்பிண்டு வரேன்!" என்று கூறி மாடிப்படிப் பக்கம் சென்றாள் அங்கு வந்த மங்களம்.

"நீங்க அப்பாலே நகருங்கோ! நானே போறேன்!" என்று அவளைத் தள்ளியவாறே மாடியேறிச் சென்ற சங்கரி தானே தன் பிள்ளையை எழுப்பிக் கொண்டு வந்தாள்.

அன்று இரவு, தன் கணவனிடம், "இவ்வளவு வயசாகி இது தெரியவில்லையே உங்களுக்கு! அதி காலையில் எழுந்திருக்கும் போதே முதல் முதலாக அப்படிப்பட்டவர்கள் முகத்திலே விழிக்கக் கூடாதென்றுதான் உங்கம்மாவை நான் அப்போ தடுத்தேன்!" என்று சங்கரி கூறிக் கொண்டிருந்ததைத் தற்செயலாய் அங்கு வந்து கேட்ட போதுதான் விஷயம் விளங்கியது மங்களத்துக்கு. அவள் கண்கள் கண்ணீரை ஆறாய்ப் பெருக்கின!

ஆயிரம் நோய் நொடியுடன் இருந்தாலும், 'அவர்' இருந்தபோது அவளுக்கு எத்தனை மதிப்பு! எத்தனை பண்டிகை சமயங்களில் எவ்வளவு பேர் 'மாமி! பழுத்த சுமங்கலியாய் இருக்கிறீர்கள்! ஆசீர்வாதம் பண்ணுங்கோ!" என்று அவள் காலில் விழுந்து நமஸ்காரம் செய்து வெற்றிலைப் பாக்கு கொடுத்துச் சென்றிருக்கின்றனர். அந்தக் கௌரவம் மதிப்பு இனி வருமா!

'ஐயோ! நான் கடைசிவரை முகம் கோணாமல் அவரருகில் இருந்து பாடுபட்டிருந்தால் அவர் அந்தத் திருப்தியிலேயே இன்னும் சிலகாலம் உயிருடன் இருந்திருப்பாரோ என்னவோ!'

மங்களத்தின் நெஞ்சு அனலிலிட்ட புழுவாய்த் துடித்துக் கலங்கியது.

அன்று பகல், பழைய புத்தகங்கள் வைத்திருந்த அலமாரியிலிருந்து ராமாயணப் புத்தகத்தைத் தேடி எடுத்துப் படிக்க உட்கார்ந்தாள் மங்களம். கணவன் இறந்த பின்பு அவர் முன்பு உபயோகித்திருந்த அதை இப்போது முதல் முதலாக எடுக்கும்போதே அவள் வயிற்றில் சங்கடம் செய்தது.



புத்தகத்தின் நடுவிலிருந்து ஏதோ ஒன்று 'தொப்'பென்று அவள் மடிமேல் விழுந்தது. பரபரப்புடன் அதை எடுத்துப் பிரித்தாள் மங்களம். அது ஒரு பழைய, சிறிய, உள்ளங்கை அகலக் குறிப்புப் புத்தகம். அதில் சில குறிப்புகள் எழுதப்பட்டிருந்தன கணபதியால்.

'மங்களம் இன்று ஒரு நிமிஷம்கூடத் தலையைக் கீழே சாய்க்கவில்லை. இருமல் என்னைக் கொன்று தள்ளிக் கொண்டிருந்தது' போன்ற சிறு குறிப்புகள் முதல் சில பக்கங்களில் இருந்தன. மேலும் அப் புத்தகத்தைப் புரட்டினாள் மங்களம். 'இன்று அவள் சற்று மனத்தாங்கலுடன் பேசினாள். இப்போதெல்லாமே ஒரு மாதிரியாகி விட்டாள். என்ன செய்வது! பாவம்! அவள் வேதனை அவளுக்கு! அவள் மனசு தங்கம்.' இப்படியாக வேதனையில் தோய்த்தெடுக்கப்பட்ட குறிப்புகள் நிறைய எழுதப்பட்டிருந்தன.

கடைசியாக எழுதப்பட்டிருந்த அந்த குறிப்பைப் படித்தபோதுதான் மங்களம் திடுக்கிட்டு விட்டாள். 'மரண தேவதையின் அழைப்பு நெருங்கிக் கொண்டிருக்கும் இந்தத் தருணம் வீணாக மருந்தும் மாயமும் எனக்கெதற்கு? இன்னும் பாட்டிலில் மருந்து இருக்கிறது என்று பொய் சொல்லித் தாமதப்படுத்தி வந்துவிட்டேன். எப்படியும் இறக்கப் போகிறவன் நான். நாலு நாளானால் என்ன, நாற்பது நாளானால் என்ன! நான் இறக்குமுன், என் நினைவு தப்புமுன் இந்த டைரியைக் கிழித்து விடமாட்டேனா! இல்லாவிட்டால் என் மங்களத்தின் கண்களில் அது பட்டு விட்டால், அப்புறம் அவளை ஆற்றவோ, தேற்றவோ யார் இருக்கிறார்கள்!'

மங்களம் அன்று வாஸ்தவத்திலேயே ஆற்றுவாரின்றித்தான் புலம்பினாள். பிள்ளை ஆபீஸுக்குச் சென்று விட்டான். நாட்டுப் பெண்ணுக்கு அவளைப் பற்றி அக்கறையில்லை. கணபதியின் குறிப்பு பலித்து விட்டது.

மறுநாள் காலை. அன்று ஞாயிற்றுக்கிழமையாதலால் மெதுவாகத்தான் படுக்கையை விட்டு எழுந்தான் மூர்த்தி. கூடத்தில் அவனுடைய தாயார் மூட்டை, முடிச்சுகள் கட்டிக் கொண்டிருந்தாள். "என்ன அம்மா! எங்கே புறப்படப் போகிறாய்!" என்றான் அவன் அதிசயத்துடன்.

"ஆமாண்டாப்பா! என்னவோ நேற்று ராத்திரி சொப்பனம்! அவர் வந்து சொன்னாப்பலே இருந்தது. 'ஊரிலே கல்கோட்டை மாதிரி இருக்கிற வீட்டை – நான் எத்தனையோ கஷ்டப்பட்டு நெற்றி வேர்வை நிலத்தில் சொட்டப் பாடுபட்டுச் சம்பாதித்துக் கட்டின வீட்டைப் பூட்டி விளக்கேற்றாமல் வைச்சிருக்கயே'ன்னு கேட்கறாப்பலே தோணித்து. வாஸ்தவமாகவே அவர் வளைய வந்த, படுத்திண்டிருந்த, தன் கடைசி மூச்சு விட்ட இடத்திலே, இருந்து நடமாடினா, எனக்கும் ஒரு திருப்தி இருக்கும்" என்று நாத் தழுதழுக்க அவள் கூறிய போது கல்நெஞ்சம் படைத்த சங்கரியின் உள்ளமே மட்டற்ற பச்சாத்தாபத்தில் கிடுகிடுத்தது.

** ** **

'கூட், கட், கட்' என்ற ஒலியுடன் இருளைக் கிழித்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்த ரயிலில் தன் பந்துக்கள் என்று யாருமில்லாத சூழ்நிலையில் தன்னந் தனியளாய்ப் பிரயாணம் செய்து கொண்டிருந்த மங்களத்தின் மனத்தில் அதுகாறும் இல்லாத அனுபவமாக ஒருவித நிம்மதியும் தெளிவும் கண்டிருந்தது. காரணம், தான் இப்போது செய்யும் இந்தக் காரியத்தால்; கணவர் கணபதியின் ஆத்மாவுக்குச் சாந்தி பிறக்கும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை அவள் மனத்தில் சுடர்விட ஆரம்பித்திருந்ததுதான்.

# என்னுடன் இருப்பவர்

டி. கே. சி. யின் வீட்டில், வட்ட முற்றத்திலும் தோட்டத்திலும் வெளி மாடியிலும், நான் கற்ற கல்வியை, உண்மையான கல்வியை, எந்தச் சர்வ கலாசாலையிலும் கற்றிருக்க முடியாது. நான் அடைந்த கவி இன்பத்தையோ அளவிடவே முடியாது.

டி. கே. சி. பதவுரை பொழிப்புரையுடன் கவிகளை விளக்க மாட்டார்; அவற்றைத் தமக்கே உரிய பாணியில் பாடி விளம்புவார். கூடுவிட்டுக் கூடு பாய்ந்து, தாமே அந்தந்தக் கவிஞனாக மாறி, இதய ஒலியுடனும், சிருஷ்டி இன்பத்துடனும், பாடல்களைப் பாடுவார். முன்னுரை மூலம், விஷயத்தைத் தெளிவாக எடுத்துச் சொல்லி, நம் மனசைப் பக்குவப் படுத்தி வைத்திருப்பாராதலால், ஒவ்வொரு பாடலும், அதன் பாவ வடிவத்துடன், நம் மனசிலே பதிந்து விடும். ஒவ்வொரு பாட்டையும் கேட்கும்போது, வானவில்லையோ வெண்ணிலவையோ காண்பது போல் இருக்கும்; நேர்த்தியான நடனத்தை ரஸிப்பது போல் இருக்கும்; இன்பக் கனவு ஒன்றை அனுபவிப்பது போல் இருக்கும்.

இப்படியெல்லாம் அனுபவித்தும் கூட, அவருக்கு ஒப்பான அளவில் கவியை அனுபவிக்க முடிவதில்லையே என்று, நான் நினைப்பதுண்டு. இதை அவரிடம் ஒருநாள் தெரிவித்து, "என்னதான் நாங்கள் கவியை ரஸித்த போதிலும், தங்களுக்கு நிகராக அனுபவிக்க முடியாது" என்று சொன்னேன். சிறுவன் ஏதோ வயதுக்கு மிஞ்சிப் பேசுகிறான் என்று எண்ணாமல், என் பாராட்டை மகிழ்ச்சியுடன் ஏற்று, "ரொம்ப, ரொம்ப நூதனமாகச் சொல்லி விட்டீர்கள்" என்று கூறி, என் பாராட்டைப் பாராட்டினார்.

குற்றாலம்! கவியானந்தருக்கு ஏற்ற எழிலகம்! தண்ணருவியுடன் தமிழருவி பொழிந்தோடுகிறது; பூமணத்துடன் பாமணம் கமழ்ந்து பரவுகிறது. இயற்கைக் காட்சிகளிலே ஞானசம்பந்தரின் அருள் வாக்கு; கோயிலிலே, மாணிக்கவாசகரின் மணிமொழிகள். எங்கெங்கும், திரிகூடராசப்பக் கவிராயரின் வரிகளை நினைவூட்டும் வண்ணங்கள். ரஸிகமணியின் தோற்றத்துக்கும், கவியின்ப அனுபவத்துக்கும், வாழ்க்கை முறைக்கும்," நட்புக் கொண்டாட்டங்களுக்கும். இதைவிட மேலான "ஸெட்டிங்" வேறு எங்கே வாய்க்கும்? அங்கே அவர், பன்னிரண்டு வருஷ காலம் வாழ்ந்திருந்த தன் மூலம், அவருக்கும் பெருமை; குற்றாலத்துக்கும் பெருமை.

நாலு வருஷங்களுக்கு முன்னால், ரஸிகமணி, இங்கே டெல்லிக்கு வந்து போது, செந்தமிழ்க் கொண்டல் ஒன்று, குற்றாலத்திலிருந்து, இங்கு வந்ததாகவே எண்ணினேன். அந்தக் கொண்டல் எட்டாத் தொலைக்கு எட்டி வந்து, தமிழகத்துப் பாவமுதையும், பண்பமுதையும், யமுனைக் கரையில் பொழிந்தது.

குற்றாலக் கொண்டலுக்கு வரவேற்புரை எழுதி வாசித்தளிக்கும் உரிமை எனக்குக் கிடைத்தது — அவருடன் இருந்தவன் என்ற காரணத்தால். இங்குள்ள இலக்கிய நண்பர்களை, அவருக்கு நான் அறிமுகம் செய்து வைத்த போது, "இவர் என்னுடன் இருந்தவர்" என்று அவர்களிடம் அவர் தெரிவித்து என்னை மகிழ்வித்தார்.

"என்னுடன் இருப்பவர்" என்று என்னைக் கொண்டாடிய அண்ணல் மறைந்து விட்டார். இனி நான் அவருடன் இருக்க முடியாது. ஆயினும் அவர் என்னுடன் இருப்பார். நல்ல கவிகளை ரஸிக்கும் போதும், நல்ல புஸ்தகங்களைப் படிக்கும் போதும், இனிய இசையைக் கேட்கும் போதும், வண்ணச் சித்திரங்களைப் பார்க்கும் போதும், வாழ்க்கையிலோ கலையிலோ அழகைக் காணும் போதும், என்னுடன் அவரும் இருப்பார்!

—கந்தா

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீமத் ஜகத்குரு சங்கராச்சார்ய ஸ்வாமி, ஸ்ரீமுகம்.

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छंकरभगवत्पाद प्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादैः
क्रियते नारायणस्मृतिः ॥

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண சுந்தரகாண்டம் D.S. ராஜன் அவர்களின் தமிழ் வசன புஸ்தகம் பார்வையிடப்பட்டது.

இப்புஸ்தகம் எல்லோருக்கும் பொருள் விளங்கும்படி புதிதான முறையில் அழகான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஹனுமான் கடலைத் தாண்டியது, ஹனுமானைப் பற்றிய விவரங்கள் கேட்ட ராக்ஷஸிகளுக்கு ஸ்ரீ ஸீதாதேவி பதில் சொல்லியது முதலிய இடங்களில் அனேக அபூர்வமான விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்புஸ்தகம் பக்தஜனங்கள் எல்லோருக்கும் மிகவும் பிரயோஜனப்படும். ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தை அர்த்தத்துடன் பாராயணம் செய்பவர்கள் மூலபாராயணம் செய்துவிட்டு அந்தந்த ஸர்க்கங்களின் இந்த புஸ்தகத்திலிருந்தும் தமிழ் மொழிபெயர்ப்பையும் வாசித்தால் அனுகூலமாயிருக்கும். ஸௌகர்யமாயிருந்தால் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மூலத்தையும் சேர்த்து அச்சிட்டு ஒரே புஸ்தகமாக வெளியிட்டால் அதிக உபயோகமாயிருக்கும்.

இம்மாதிரி கைங்கர்யங்களை மேலும் செய்து கொண்டு ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனுடைய ஸம்பூர்ண கிருபைக்கு பாத்ரமாக வேணுமென ஆசீர்வாதம் செய்கிறோம்.

முகாம்: காஞ்சிபுரம்
விஜய மார்கழி 29

நாராயணஸ்ம்ருதி:

ஸ்ரீ வால்மீகி ராமாயணம் சுந்தரகாண்டம் (தமிழ் வசனம்) விலை ரூ. 3/4/- தபால் சார்ஜ் வேறு
கிடைக்குமிடம்: 21, மந்தைவெளித் தெரு, சென்னை – 28

நண்பர்கள் உங்கள் வீட்டுக்கு வரும்போது...



**நினைவில் இருக்கட்டும்**

உபரி விடமின் சத்து சேர்க்கப்பட்ட பிரிட்டானியா பிஸ்கோத்துகள், இளைஞர், முதியோர் யாவராலும் விரும்பப்படுகிறது.

'பிக்ஸ்' இனுசை ருசி பாருங்கள். கரகரப்பாகவும், உப்பிட்டு ருசிகரமாயுள்ள இந்த பிஸ்கோத்துகளை விரும்புவீர்கள்.



சிறந்த பிஸ்கோத்துகள்

# பிரிட்டானியா

BBX ITM

இதோ ஓர் முற்றிலும் மாறுபட்ட
அற்புதமான ரேடியோ பாட்டரி
உங்களுடைய
ரேடியோவிற்காக



# புதிய

## சக்தி நிறைந்தது

விலை குறைவானது
நம்பிக்கைக்குகந்தது
நீடித்து உழைக்கக்கூடியது




"எவரெடி" "மினிமாக்ஸ்" ரேடியோ பாட்டரி உங்களுக்கு இந்த அனுகூலங்களை எல்லாம் சேர்த்து அளிக்கிறது ஏனெனில் அது பாட்டரி தயாரிப்பதில் முற்றிலும் புரட்சிகரமான முறையின் பயனாக உற்பத்தி செய்யப்பட்டது. குறைந்த இடத்தில் அமைக்கக்கூடிய தட்டையான செல்கள் நிறைந்துள்ள இந்த பாட்டரி அடக்கமாகவும் நம்பிக்கைக்குகந்ததாகவும் இலேசாகவும் இருக்கிறது. மேலும் நீடித்துழைக்கக்கூடியது. இது உங்களுக்கு சக்தியை இரட்டி அளிக்கிறது. ஏனெனில் இந்த பாட்டரியின் உள்ளே ஒவ்வொரு கன அங்குல இடத்திலும் இதுவரையில் தயாரிக்கப்பட்ட மற்றெந்த ரேடியோ பாட்டரியையும்விட அதிகப்படியான வேலை செய்யக்கூடிய பொருள்கள் பொருத்தப்பட்டுள்ளன

உங்கள் பணத்திற்கு அதிக மதிப்பு நீங்கள் செலவழிக்கும் பணம் சக்திக்காக—பாக்கிங் வஸ்துக்களுக்காக அல்ல!

"எவரெடி" "மினிமாக்ஸ்" ஏன் இதர ரேடியோ பாட்டரிகளை விடச் சிறந்தது என்று உங்களுடைய ரேடியோ பாட்டரி வியாபாரியை கேளுங்கள்




ஒரு நாஷனல் கார்பன் தயாரிப்பு

NOM 6901




## 42. உள்ளம் புகுந்தாள்!

சுதாகரின் குரலில் எரிச்சல் தொனித்தால் என்ன? ஆத்திரம்தான் தொனித்தால் என்ன? அதற்கெல்லாம் பரமானந்தரா பயப்படக் கூடியவர்? "நீ ரொம்பக் கண்டு விட்டாயாக்கும்! இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு மனம் என்று ஒன்று வேறு இருக்கிறதா? இந்த விஷயத்தில் எனக்குத் துளிக்கூட நம்பிக்கை கிடையாது!" என்றார்.

"மனம் என்று ஒன்று இருக்கிறதா என்று கேட்கிறீர்களே! இல்லாமல் என்ன? அப்படியே நீங்கள் சொல்வதுபோல் இல்லையென்று வைத்துக் கொள்வோம். இருந்தால் என்ன செய்வார்களாம்?" என்று கேட்டான் சுதாகர் ஆத்திரம் தொனிக்கும் குரலில்.

"பழைய காலத்துப் பிள்ளையாக இருந்தால் தனக்குப் பிடித்த பெண்ணைத் தூக்கிக் கொண்டு ஓடியிருப்பான்!"

"பெண்கள் சொத்து அல்ல, இஷ்டப்பட்டவன் இஷ்டப்படி தூக்கிக் கொண்டு ஓடுவதற்கு! அவர்களை அப்படிச் சொத்தாகப் பாவிப்பதும் கூடாது!" என்றான் சுதாகர்.

"அப்படியே நீ சொல்வது போலிருந்தால் இன்னும் நல்லதாகப் போயிற்று! நாலு பேருக்கு நடுவில் வெகு தைரியமாக ஜம்மென்று சேர்ந்து வாழலாம் அல்லவா?"

"அது ரொம்ப ரொம்பக் காட்டுமிராண்டித்தனமான காரியம்; மிக மிகப் பண்பாடற்ற பழக்கம்" என்றான் சுதாகர்.

"இருக்கலாம். ஆனால், அது உலகத்தில் நடந்திராத காரியமோ வழக்கமற்ற வழக்கமோ அல்லவே!" என்றார் பரமானந்தர்.

சுதாகருக்கு அவர் சொல்வது விசித்திரமாகத் தோன்றியது. ஆனால் உண்மையாகவும் பட்டது. அவர் வாய்மொழியாக அத்தகைய பேச்சைக் கேட்கும் பொழுது அளவற்ற ஆச்சரியமும் அவனுக்கு ஏற்பட்டது.

திருமணம் என்பது புனிதமான சடங்கு; வெகு பரிசுத்தமான பிணைப்பு. சமூகத்தின் நன்மைக்கும் மேன்மைக்கும் இத்தகைய சடங்கு கட்டாயம் தேவை. ஆனால் சில சமூகங்கள் திருமணத்தைப் பரிசுத்தமான பிணைப்பாக, புனிதமான சடங்காக ஒப்புக் கொள்வதில்லை. அவற்றின் கருத்துப்படியே பார்த்தாலும் திருமணம் என்பது சமூகத்துக்கு அத்தியாவசியமான மிக மிகச் சௌகரியமான பழக்கமாகவே தோன்றுகிறது. அத்தகைய பழக்கம் ஏற்படுத்திக் கொள்வதனால் சமூகம் ஒரு நெறியான சுவட்டில் செல்ல முடியும். பாதை விட்டுப் பாதை சென்று பல இன்னல்களுக்கு இலக்காகாது.

திருமணச் சடங்கு என்பது புனிதமான சடங்காக இருக்கட்டும், அல்லது சௌகரியமான பழக்கமாகவேதான் இருக்கட்டும்! எப்படியிருந்தாலும் எந்த நிலைமையிலும் சமூகம் அதை நிர்வகித்தே ஆகவேண்டும். அதைத் தகர்த்தெறியக் கூடாது. அதுதான் சமூகத்துக்குப் பயன்தரத் தக்கது. தாம்பத்திய வாழ்க்கையில் வெற்றிபெற விரும்பினால் திருமணத்தைக் காட்டிலும் மேலான நல்ல வழி இருப்பதாகவே தெரியவில்லை. எனவே, திருமணம் என்பது சமூகத்துக்கு அத்தியாவசியமானது, தவிர்க்க முடியாதது என்று தெளிவாகத் தெரிகிறதல்லவா?

திருமண வாழ்க்கையை வெற்றிகரமானதாக ஆக்குவதற்கு இதைக் காட்டிலும் இன்னும் நல்ல நல்ல வழிகள் தென்பட்டால் கட்டாயம் கண்டு பிடிக்கலாம். ஆனால் அதே சமயத்தில் மனத்துக்குப் பிடிக்காத அசிங்கமான திருமணத் தொடர்பை நிலை நாட்டியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டும் இருக்கக் கூடாது. எதற்கும் ஒரு எல்லை வேண்டும். புனிதத் தன்மையையும் சௌகரியத்தையும் மீறிச் சீரற்ற பாதையில் சென்று விடும் திருமணங்களை உடும்புபோல் விடாப் பிடியாகப் பிடித்து வைத்துக் கொள்வதிலும் அர்த்தமில்லை.

மனத்துக்குப் பிடிக்காத நரகத்துக்கு ஒப்பான தாம்பத்திய வாழ்க்கையை நிலை நிறுத்துவதில், வடதுருவமும் தென் துருவமுமாக இருக்கும் தம்பதிகளை ஒன்று சேர்த்து வைக்க முயல்வதில் என்ன தர்க்கம் இருக்கிறது? என்ன நியாயம் இருக்கிறது? என்ன அறிவுடைமை இருக்கிறது? அல்லது என்ன தர்மமும் கர்ம சிரத்தையும் தான் இருக்கிறது?

திருமணம் என்பது ஒரு கட்டுப்பாடு என்ற பெயர் வேண்டுமானால் நிலை பெற்றிருக்கலாம். ஆனால் அந்தத் திருமணம் எந்தப் புனிதமான நோக்கங்களைக் கொண்டு தர்மச் சடங்காக்கப் பட்டதோ, அந்த நோக்கம் ஈடேறாமல் போய் அதற்கு நேர் எதிரிடையான பலனைக் கொடுத்தால் என்ன பயன்? அம்மாதிரி தகாத தொடர்புகளைத் தெறித்துத் தடுத்து நிறுத்த விவாகரத்தைக் காட்டிலும் மேலான வேறு நல்ல வழி என்ன இருக்க முடியும்? சமூகத்துக்குப் புனிதமான திருமணச் சடங்கு எத்தனை அவசியமோ, அத்தனை விவாகரத்தும் தேவைதானே?

"மனோரமாவைப் பார்த்தாயா?"

பலத்த யோசனையில் ஆழ்ந்திருந்த சுதாகரின் யோசனையைக் கலைத்துக் கேட்டார் பரமானந்தர்.

"ஆம், பார்த்தேன்!" என்றான் சுதாகர்.

"அப்படியானால் உனக்கு அந்தப் பழைய வழி ஒன்று தான் பாக்கியிருக்கிறது!" என்றார் பரமானந்தர்.

"எந்த வழி?" என்று ஆதுரத்துடன் கேட்டான் சுதாகர்.

"ஆனால் இந்த இருபதாம் நூற்றாண்டில் வாழும் வாலிபர்கள் அந்த வழியைப் பின்பற்றுவார்களா என்பதில்தான் எனக்குப் பெருத்த சந்தேகம்" என்றார் பரமானந்தர்.

"ஏன்?"

"இந்தக் காலத்து வாலிபர்கள் எல்லாரும் வெறும் காமுகர்கள். சிற்றின்பத்தையே குறிக்கோளாகக் கொண்ட கயவர்கள் உண்மையான காதலர்கள் அல்லவே அல்ல. எனக்கு இக்காலத்து வாலிபர்களைப் பற்றிச் சந்தேகம் உதிக்கக் காரணம் இதுதான்!" என்றார்.

"நான் என்ன செய்தால் காதலன் என்று சொல்லப் படுவேன்!" என்று கேட்டான் சுதாகர் அறியாப் பாலகனைப் போல்.

"காதலன் என்று சொல்லப்பட வேண்டும் என்பதற்காக ஒருவன் காதலன் ஆக வேண்டிய அவசியம் இல்லை; அப்படி ஆக நினைத்தாலும் அவனால் காதலன் ஆக முடியாது. உண்மையில் காதலனாக இருந்தால்தான் காதலன் என்ற பெயர் பெற முடியும்!" என்றார் பரமானந்தர்.

"சரி, அதிருக்கட்டும். நீங்கள் இப்பொழுது என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?" என்று கேட்டான் சுதாகர்.

"என்னைக் கேட்டால் நீ சாதுவாகி விடு, சந்நியாசி ஆகி விடு, துறவியாகி விடு என்று தான் சொல்லுவேன். நீ தன்னை மறந்து விட வேண்டும். தன் நிலை மறந்து மதர்த்தனாகி விடவேண்டும். உடலை மறந்து உயர்ந்த நோக்கம் பெற வேண்டும். வாழ்க்கையில் அடிபட்டுத் தோல்வியுற்று அழ உட்கார்ந்து விடக் கூடாது. குழந்தைகளைப் போல் பிடிவாதம் பிடிக்கக் கூடாது. உயர்ந்த நோக்கத்தைப் பெற முயற்சிசெய். உடலை மறந்து விடு. முடிந்தால் மனோரமாவையும் மறந்து விடு!" என்று உபதேசித்தார் பரமானந்தர்.

"மனோரமாவை மறப்பது என்பது முடியாத காரியம் ஆயிற்றே!"

"வாஸ்தவம். ரொம்பச் சிரமமானகாரியம்தான்.



இருந்தாலும் கஷ்டங்களைக் காலால் உதைத்து முன்னேற முயற்சிப்பவன்தான் உண்மையான வாலிபன். இளைஞன் என்றால் உள்ளத்தில் உறுதி உள்ளவனா யிருக்க வேண்டும். கஷ்டங்களில் அடிபட்டுத் தாள முடியாமல் உட்கார்ந்து அழத் தொடங்கி விடக் கூடாது. அப்படி அழுபவன் பெருங் கோழை. கஷ்டம் என்பது பணத்தைப் பொறுத்ததாயிருந்தாலும் சரி, பிரேமையைப் பொறுத்ததா யிருந்தாலும் சரி, பயந்து சாகக் கூடாது. எதிர்த்து நின்று வெற்றி கொள்ள முயல வேண்டும். அவன்தான் உண்மையில் ஆண்மை வாய்ந்தவன். நெஞ்சு உறுதி தோய்ந்தவன்!'' என்றார் பரமானந்தர்.

தீராத் துயரையும் தீர்த்து வைக்கும் உபாயத்தைச் சுதாகருக்குப் பரமானந்தர் சொன்னார். கல்வி கேள்விகளிலும் தெய்வ வழிபாட்டிலும் மன ஈடு பாட்டிலும் ஏனைய வேலைகளிலும் துயரத்தை மறக்கச் செய்யும் அபூர்வமான சக்தி இருக்கிறது என்பதை யும் எடுத்துச் சொன்னார். ''ரஹ்மத்தையும் குயிலியையும் பார்! அவர்களுடைய வாழ்க் கையை உதாரணமாகக் கொண்டு உன் வாழ்க்கையை வகுத்துக் கொள்ள வழி தேடு. அவர்களுடைய வாழ்க்கை உனக்குப் புத்தி புகட்டும்!'' என்றும் உபதே சித்தார். அதோடு அவர் நிறுத்திக் கொள்ள வில்லை. ''துயருற்றுத் தாழ்வுற்று அல்லல் படும் மனிதர்களின் மனத் துயரைத் துடைக்க வழி தேடு. இல்லாமை யினால் வாடி வருந்தும் மக்களுக்கு இனியது செய். தன்னலம் கருதாமல் பிறர் நலம் ஒன்றையே கருத்தில் கொண்டு வாழ்க்கை யைக் கழிக்க முற்படுவாயாகில், காதல் எண்ணம் ஈடேறுவதைக் காட்டிலும் மேலான எண்ணம் ஈடேறியதாக எண்ணி மனம் மகிழ்வாய். நான் எதையும் மிகைப் படுத்திக் கூறவில்லை. அநுபவித்துப் பார்த் தால்தான் நான் சொல்வதன் உண்மை உனக்கு நன்றாக விளங்கும்!'' என்றும் சொன்னார்.



துறவு என்பது பாரத நாட்டுக்கே பெரும் கௌரவம் அளிக்கும் விஷயம். உலகத்தைத் துறந்து உலகத்துக்கு உண்மையான சேவை செய்யும் சக்தி துறவறத்துக்கும் அதை மேற் கொள்ளும் துறவிக்கும்தான் உண்டு.

எனவேதான், கீழ்நாட்டு மக்கள் துறவைப் பெறற்கரிய பெரும் பொருளாக மதித்துப் போற்றிப் புகழ்கிறார்கள். பச்சாத்தாபமே பெரும் பிராயச் சித்தம் என்பது பண்டைய பாரதத்தின் பண்பாடு. அதையே மேற் கொண்டு ரஹ்மத்தும் குயிலியும் தங்கள் பழைய வாழ்க்கையை உதறி எறிந்து விட்டுப் புது வாழ்க்கையைத் தொடங்கியிருந்தார்கள்.

ஆகவே, பரமானந்தரின் உபதேசப்படி சுதாகர் அவர்களிருவரையும் தன்னோடு வைத்துக் கொண்டு தன் புது வாழ்க்கையைத் தொடங்கினான். தனிமையில் அமர்ந்து நிஷ்டை புரியவும் துறவு மனப்பான்மையை உள்ளத்தில் உண்டு பண்ணிக் கொள்ளவும் தொடங்கி யிருந்தான். காதலில் ஏமாற்ற முற்ற அவனுக்கு அது மனத்துக்கு எத் தனையோ அமைதி அளித்தது. காரணம், அவன் மனோரமாவின் வாழ்க்கைக்கு இடை யூறாக இல்லாமல் விலகி வந்து விட்டான். ராதாவின் வாழ்க்கைக்கும் துன்பம் விளைவிக் காமல் தூர விலகி வந்து விட்டான். இரு பெண்மணிகளுக்கும் மனச் சந்துஷ்டியுடன் வாழ வகை செய்து விட்டதாக அவன் எண்ணினான். அதனால்தான் அவன் மனம் நிறைந்து அமைதியுற்றுத் துறவறத்தில் இரு தயத்தை ஈடுபடுத்த முயன்றான். என்ன இருந் தாலும் மனம் கேட்கிறதா? மனம் நிலை கொள்ளாமல் தவிக்கத்தான் செய்தது.

இம்மாதிரி நிலையற்ற மனத்தை நிலையுறச் செய்ய முயற்சித்துக் கொண்டிருக்கும் சமயத் தில் அதே இரண்டு பெண்மணிகளும் திடுதிப் பென்று தனக்கு விருந்தாளியாக வந்து சேரு வார்கள் என்று அவன் கனவிலும் நினைக்க வில்லை. எதிர்பாராத இந்த நிகழ்ச்சி எதற் காக நிகழ வேண்டும்? அவன் மனத்தை அனாவசியமாக நிலைகுலையச் செய்யவேண்டும்?

மனோரமாவினால் சுதாகரை மறக்க முடிய வில்லை. அவன் நினைவிலேயே அவள் தன் உள்ளத்தை உருக்கி உடலையும் உருக்கிக்

கொண்டு விட்டாள். ஆற்றங்கரையில் மனோரமாவின் உடலையும் உடல் போயிருந்த நிலைமையையும் பார்த்த சுதாகர் அவளுடைய உள்ளத்தின் நிலை எத்தகையதாயிருக்க வேண்டும் என்பதை ஒருவாறு நன்றாகப் புரிந்து கொண்டு விட்டான்.

மனோரமா சொன்னபடி அவன் அவளைத் தன்னுடன் அழைத்து வந்திருந்தால் அவள் நிலை இப்படிச் சீர்கேடு அடைந்திருக்குமா?

ஓடி வந்ததிலிருந்து நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் நினைத்து அவன் மனம் இல்லாத எண்ணங்கள் எல்லாம் எண்ணித் தன்னைத் தானே வாட்டிக் கொண்டிருந்தது.

இரவு வெகுநேரம் கழிந்த பின்னரும் அவன் ஆற்றங் கரையிலேயே அமர்ந்திருந்தான். பலத்த ஆயத்தங்கள் செய்து கொண்டு ஆர்ப்பாட்டத்துடன் வந்த புயலும் மழையும் வந்தவிதம் தெரியாமல் ஒதுங்கி விட்டன.

இயற்கை அமைதியுற்று விட்டது. ஆயினும் அவன் உள்ளத்தில் உருவாகியிருந்த புயல் நிமிஷத்துக்கு நிமிஷம் கணத்துக்குக் கணம் பயங்கரப் பேயுருவம் தரித்துக் கொண்டிருந்தது.

ரஹ்மத் கூப்பிட வராமல் இருந்திருந்தால் அவன் தன் குடிசைப் பக்கமே போயிருந்திருக்கமாட்டான். கரையிலேயே உட்கார்ந்து பொழுதைப் போக்கியிருப்பான். ரஹ்மத் கூப்பிட வந்து விடவே, அவன் தன் குடிசையை நோக்கிப் புறப்பட்டான்.

குடிசைக்கு வந்ததும், "ஏன் ரஹ்மத்! எல்லா விருந்தாளிகளுக்கும் ஆகாரத்துக்கான வசதிகள் செய்து கொடுத்தாகி விட்டதா?" என்று கேட்டான் சுதாகர்.

"எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுத்தாகி விட்டது. சகோதரிகள்தான் சாப்பிடவில்லை!" என்றான் ரஹ்மத்.

பெண்களின் மானத்தை விற்று வயிறு வளர்த்து வந்த ரஹ்மத்தே புனித நோக்கங்கள் கொண்டவனாகி விட்டான். என்ன ஆச்சரியம்! இதிலிருந்து என்ன தெரிகிறது? மனிதன் எந்த நிலையிலும் சீர்திருந்திவிட முடியும். மிகத் தாழ்வுற்ற நிலைமையை அடைந்து விட்ட பொழுதிலும் மனம் வைத்தால் மனிதன் மிகவும் உயர்வுற்று வாழ முடியும் என்றுதானே?

அதனால் பாவியை வெறுக்க வேண்டிய—பாவியைத் திரஸ்கரிக்க வேண்டிய அவசியமில்லை. அம்மாதிரிப் பாவியை வெறுத்து அவமதித்தால், அவமதித்தவனே பாவியாகி விடுகிறான். அதனால்தான் ஆன்றோர்கள், 'பாவியை வெறுக்காதே. பாவத்தை வெறு!' என்று சொல்லிப் போயிருக்கிறார்கள். எத்தனை உண்மையான வார்த்தை!

"எல்லோரும் படுத்து உறங்குவதற்கான ஏற்பாடுகளும் செய்து விட்டாய் அல்லவா?" என்று கேட்டான் சுதாகர்.

"ஆகா! எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டேன். இத்தனை பெரிய சத்திரத்தில் இடத்துக்குக் குறைவு ஏது?" என்றான் ரஹ்மத்.

விருந்தாளிகளைப் பற்றிக் கேட்டறிந்த சுதாகர், "சரி, நேரமாகிறது. நீ போய்ப் படுத்துத் தூங்கு!" என்று ரஹ்மத்துக்கு விடை கொடுத்தனுப்பினான்.

ரஹ்மத் அங்கிருந்து போய் விட்டான். ஆனால் இரவு முழுவதும் சுதாகர் தூங்கவில்லை. கண் கொட்டாமல் விழித்துக் கொண்டே மனம் போன போக்கில் பற்பல சிந்தனைகளில் ஈடுபட்டிருந்தான்.

விடியற்காலையில் குயிலி எழுந்து பாடிய பிரார்த்தனை கீதம்தான் அவன் சிந்தனையைக் கலைத்தது.

"கடைக் கண் பாராய், கருணாநிதி!"

குயிலி பாடிய அந்தப் பாட்டு சூழ்நிலையில் ஒரு தெய்வக் களையை உண்டு பண்ணி ரீங்காரம் செய்து கொண்டிருந்தது.

சுதாகரின் குடிசைக்கருகிலேயேதான் தர்ம சத்திரம் இருந்தது. சத்திரத்துக்குப் போவதா வேண்டாமா என்ற யோசனையில் ஆழ்ந்தவாறே சுதாகர் உட்கார்ந்திருந்தான். அதற்குள் மாதவப் பிரஸாதின் ஒரு வேலைக்காரன் வந்து, "எசமான் உங்களைக் கூட்டி வரச் சொன்னாருங்க!" என்றான்.

சுதாகர் தயங்கியவாறே சத்திரத்தை அடைந்தான். நோயுற்றிருந்த மனோரமா ஒரு கட்டிலில் படுத்திருந்தாள். கட்டிலில் அவள் படுத்திருப்பதே தெரியவில்லை. அவள் உடல் அவ்வளவு ஒட்டி உலர்ந்திருந்தது.

அவ்வளவு இளைத்திருந்த பொழுதிலும் அவள் முகத்தில் ஒரு தேஜஸ் தாண்டவமாடுவதையும் கண்களில் கவர்ச்சி மிகுந்த ஒளி சுடர் விட்டுப் பிரகாசிப்பதையும் சுதாகர் தன் கண்களால் கண்டான்.

"மனோரமா உங்களை நினைத்துக் கொண்டு கூப்பிட்டாள்!" என்றார் மாதவப்பிரஸாத் சுதாகரைப் பார்த்து.

சுதாகரின் இருதயம் கதறியது. படபடவென்று அடித்துக் கொண்டு அலறியது. மனோரமாவின் நிலைமை இப்படி ஆக வேண்டுமா என்று குமைந்தது.

தியாகம் செய்தது மனோரமாவா? சுதாகரா? உலகத்தை வெறுத்து ஓடிப் போய் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு உலகத்தை மறந்து வாழ நினைக்கும் சுதாகர் உண்மைக் காதலனா? அல்லது உலகத்திலேயே இருந்துகொண்டு தீவிர வேதனையையும் படமுடியாத பல துயரங்களையும் பொறுத்துக் கொண்டு சிரித்த முகத்துடன் சாவைத் தழுவிக் கொள்ளக் காத்திருக்கும் மனோரமா உண்மைக் காதலியா? இந்தக் கேள்விக்குப் பதில் யாரால் சொல்லமுடியும்?

கண் ஜாடை காட்டி மனோரமா தன்னருகில் சுதாகரை வருமாறு அழைத்தாள்.

நோயுற்றிருக்கும் பொழுது மட்டு மரியாதைகளையும் பழக்க வழக்கங்களையும்



# விசைச் சக்தியின் வேகம்

நீங்களும் பெறுக



# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிரமமான வேலை நிலையிலும், சளைக்காத உணர்ச்சியிருக்கும் போதுதான் நீங்கள் திடமான ஆரோக்யம் உள்ளவரென்பதைக் குறிக்கும். சளைக்காத உணர்ச்சி பெறுவதற்கு, பிரதி தினமும் போஜனத்தின் அங்கமாக வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதைத்தவிர சிறந்த தொன்றுமில்லை. தேக வளமூட்டுவதற்கு அத்யாவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், வேலை செய்வதற்கான திராணியை பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் இதர நிலைமைகளுக்கு இடங்கொடாதபடி தேகத்திற்கு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கச் செய்யும்.

உங்கள் குடும்பம் முழுவதற்கும் இப்பொழுதே வாங்கி விடுங்கள்




# WATERBURY'S COMPOUND

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களை தென்புடன் வைத்திருக்கும்

NAS.41-63

# ஸிரோலின்




உங்கள் இருமலின் காரணத்தை அகற்றுகிறது

---

# MARGO SOAP

*The Genuine*

**NEEM OIL SOAP**
with
**CHLOROPHYLL**



## மார்கோ ஸோப்

வாசனை நீக்கப் பெற்ற வேப்பெண்ணெயிலிருந்து ஒரு விசேஷ முறைப்படி தயாரிக்கப்படுவது. அதன் அபரிமிதமான கிருமி நாசன நுரை அழுக்கை அகற்றி, சருமத்தினுள் புகுந்து நன்கு சுத்தம் செய்யும். சருமத்திற்குப் புஷ்டியும் மென்மையும் தரும். அபூர்வ மணம். நுட்பமான சருமத்திற்கும் ஹானியற்றது.

**A CALCHEMICO PRODUCT**

தென் இந்தியா ஆபீஸ்:
5/149, பிராட்வே, மதராஸ்-1

பார்க்க முடியுமா? பெரிதாகப் பாராட்டிக் கொண்டிருக்க முடியுமா? நோயாளிக்குத் தன்னைப் பார்க்க வருபவர்கள் எல்லோரும் நல்லவர்களாகப்படுகிறார்கள்; தனக்கு மிகவும் வேண்டியவர்களாகப் படுகிறார்கள். தன்னிடம் அபார அன்பும் அநுதாபமும் காட்டுபவர்களாகப் படுகிறார்கள்! சுதாகர் அவள் எண்ணப்படி அவளுடைய கட்டிலின் அருகில் போய் நின்றான்.

“உட்காருங்கள்!” என்றாள் மனோரமா.

சுதாகர் கட்டிலின் அருகில் கீழே உட்கார்ந்தான். மனோரமா கண்ணிமை கொட்டாமல் அவனையே அகல விரிந்த கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

“உடம்பை எப்படிக் கெடுத்துக் கொண்டு விட்டாய்!” என்று துயரம் தொண்டையை அடைக்கக் கேட்டான் சுதாகர்.

“என்றைக்காவது ஒரு நாள் இந்தக் கட்டை இப்படி ஆகவேண்டியது தானே?” என்றாள் மனோரமா. அவள் குரலில் உயிர் இல்லை; உணர்ச்சி இல்லை; வேகம் இல்லை.

“இப்படி யெல்லாம் பேசாதே! உன் உடம்பு சீக்கிரமே சரியாகி விடும்!” என்று சுதாகர் அவளுக்கு ஆறுதல் அளித்தான்.

நோயாளிக்கு இது தீரக்கூடிய வியாதி, இது தீராத வியாதி என்று புரிந்து கொள்ள அதிக நாள் பிடிப்பதில்லை. தீராத வியாதி என்று தெரிந்து விட்டால், அப்புறம் மரண பயத்தையும் கூட அவன் மறந்து விடுகிறான். ஒருநாள் இறந்துதான் ஆகவேண்டும் என்று தீர்ந்தபின் பயந்தால் கட்டி வருமா?

எனவே, மனோரமா, “நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை!” என்றாள்.

“நீ எதைப்பற்றியுமே கவலைப் படக் கூடாது!” என்றான் சுதாகர்.

“அதெப்படி முடியும்? என் உள்ளத்தைத் தான் ஒரு விஷயத்தைப் பற்றிய கவலை அரித்துக் கொண்டிருக்கிறதே!” என்று சொன்ன மனோரமா கண்களை மூடிக் கொண்டாள். அவ்வளவு பேசியதில் அவள் அத்தனை தூரம் களைத்துப் போயிருந்தாள். இரண்டு நிமிஷம் பேசுவதற்குள்ளேயே இத்தனை களைப்பு வந்து விட்டதென்றால் வியாதி எத்தனை தூரம் முற்றி யிருக்க வேண்டும்!

சிறிது நேரம் சிரம பரிகாரம் செய்து கொண்ட பின் அவள் மெதுவாகத் தன் கண்களைத் திறந்தாள். அவள் கண்களில் அப்பொழுது சொல்ல முடியாத சோகம் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. “உங்களை ஒரு சமாசாரம் கேட்கலாமா?” என்றாள்.

“அதிகம் பேசாதே. களைப்பு மேலிட்டு விடும்!” என்றான் சுதாகர்.

“அதெல்லாம் களைப்பு மேலிடாது. இரண்டே இரண்டு வார்த்தைகள் தான் உங்களிடம் சொல்லணும்!”

“சொல்லு, மனோரமா!” என்றான் சுதாகர்.

“நான் போய் விட்டால் நீங்கள் கடிதம் எழுதுவீர்களா?” என்று அன்பே உருவாகக் கேட்டாள் மனோரமா.

“கட்டாயம் எழுதுவேன்!”

“எங்கே எழுதுவீர்கள்?”

“நீ இருக்கும் இடத்துக்குத்தான்!”

“இதோ பாருங்கள். ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். மறந்து விடக்கூடாது!” என்றாள் மனோரமா.

“மறக்கவே மாட்டேன். மறப்பதில்லை என்று வாக்குறுதி வேண்டுமானாலும் அளிக்கிறேன்” என்றான் சுதாகர்.

மனோரமாவின் முகம் மகிழ்ச்சியினால் மலர்ந்தது; கண்கள் சிரித்தன.

அட! இது என்ன இது? நகைத்த முகம் நகைத்தபடியே நின்று விட்டதே! கண்கள் கூட இமை கொட்டவில்லையே! ஏன்?

“அடடே! பார், பார்! என்ன ஆயிற்று?” என்று ராதா கூச்சலிட்டாள். எல்லோரும் அந்தப் பக்கம் ஓடி வந்தார்கள்.

“மனோரமா!”

மாதவப் பிரஸாத் உரக்கக் கூப்பிட்டார்.

மனோரமாவின் கண்கள் சிரித்தவண்ணம் அசையாமல் ஆடாமல் இருந்தன.

“மனோரமா! மனோரமா!”

மாதவப் பிரஸாத் அழுது புலம்பி அடித்துக் கொள்ளத் தொடங்கி விட்டார். அவருடைய அந்தப் புலம்பல் அந்தச் சூழ்நிலையையே புலம்பித் தவிக்கச் செய்து விட்டது.

மனோரமா பதில் அளிக்கவில்லை. அவளுடைய அந்தச் சிரிப்புத்தான் இந்த உலகத்தவர்களுக்கு, இந்த உலகத்தில் அவளை நேசித்தவர்களுக்கு, எல்லோருக்கும் கடைசிப் பதிலாக அமைந்திருந்தது.

சுதாகர் அவளுக்குச் சொந்தமானவன். அவன் அவளுக்குக் கட்டாயம் கடிதம் எழுதுவான், மறக்க மாட்டான்; ஒருபொழுதும் மறக்க மாட்டான். தன் வாழ்க்கைச் சுடர் அணையும் கடைசி நிமிஷம் வரை இந்த நம்பிக்கையுடனேயே அவள் உயிர் வாழ்ந்தாள். கடைசி நிமிஷத்தில் அவளுடைய அந்த நம்பிக்கை நிறைவேறிற்று. நம்பிக்கை நிறைவேறியதில் மனோரமா மனம் பூரித்தாள். அவளுடைய அந்தப் பூரிப்பு முகத்தில் சிரிப்பாகத் தவழ்ந்தது. உடலில் பூரிப்பையும் உதட்டில் புன்னகையையும் கண்களில் சிரிப்பையும் தவழச் செய்து விட்டு அவளுடைய ஆத்மா பறந்து விட்டது. உடலைப் பிரிந்து ஓடிவிட்டது. எங்கே? யாருக்குத் தெரியும் எங்கே என்று? இன்றுவரை யாராலும் விடை காண முடியாத இடத்துக்குத் தான் அது ஓடியிருக்க வேண்டும்!

அவளுடைய ஆவி பிரிந்ததைக் கண்டதும் அந்தத் தர்ம சத்திரம் அழுதது. நிம்மதியாக ஓசையின்றி ஓடிக்கொண்டிருந்த நதி அழுதது. மரம் செடிகள் அழுதன. மிருகங்கள் அழுதன. சூழ்ந்திருந்த சுற்றத்தார் அழுதார்கள். சூழ்நிலையே அழுதது. ஆனால் சுதாகர் மட்டும் அழவில்லை. அவன் விரக்தியே உருவாகி விட்டான். அவன் சகலத்தையும் துறந்த

துறவிபோல் சுக துக்கம், இன்ப துன்பம் விருப்பு வெறுப்பு எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டவனாகி விட்டான்.

"மனோரமாவை மறக்க மாட்டேன். எப்பொழுதும் நினைவில் இருத்திக் கொள்ளுவேன்" என்று வாக்குறுதி அளித்த பின் அவன் எதற்காக அழ வேண்டும்? அவன் உடற் கூறு சாஸ்திரங்களிலிருந்து உலக பந்தனங்களிலிருந்து உயர விரும்பிக் கொண்டிருந்தான். அப்படிப்பட்டவன் அழலாமா?

மனோரமாவின் உடல் சிதையில் இடப்பட்டு எரிவதைப் பார்த்தான். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு உணர்ச்சிக்கு இடம் கொடாமல் கண்ணீர் சிந்தாமல் கண்களைக் கசக்கிக் கொள்ளாமல் பார்த்தான். பார்த்தான்; பார்த்துக் கொண்டேயிருந்தான்.

அப்பொழுது லக்ஷ்மி ஓட்டம் ஓட்டமாக ஓடி வந்தாள். அவளுடைய கையில் ஒரு கடிதம் இருந்தது.

அதைப் பார்த்து யாரோ, "என்ன அது?" என்று கேட்டார்கள்.

"இந்தக் கடிதத்தை அம்மாவுடன் தீயில் இடவேண்டும்!" என்று சொன்னாள் லக்ஷ்மி பிழியப் பிழிய அழுது கொண்டே.

"ஏன்?"

"அம்மாளின் கடைசி விருப்பம் இது!" என்றாள் லக்ஷ்மி.

"இங்கே கொண்டுவா, என்ன கடிதம் என்று பார்ப்போம்!" என்றான் சுதாகர்.

லக்ஷ்மி அந்தக் கடிதத்தைச் சுதாகரின் கையில் கொடுத்தாள். அந்தக் கடிதத்தில் சுதாகரின் கையெழுத்தே காட்சி அளித்தது.

"ஒன்றும் படிக்க வேண்டியதில்லை. அவள் சொன்னபடியே செய்து விடுங்கள்!" என்றார் பக்கத்தில் நின்ற மாதவப் பிரஸாத்.

சுதாகர் சென்று அந்தக் கடிதத்தை எரியும் சிதையில் இட்டான். உடனுடன் எரியும் அந்தக் கடிதத்தைப் பார்த்துக்கூட அவனுடைய இருதயம் இளகவில்லை; நெஞ்சம் கரையவில்லை. அன்று அவன் தன் இருதயத்தை வஜ்ரத்தைக் காட்டிலும் கடினமானதாக வைத்துக் கொள்வதென்று சங்கற்பம் செய்து கொண்டிருந்தானோ என்றே எண்ணத் தோன்றியது.

அன்று மாலை சுதாகர் ஆற்றங் கரையில் அமர்ந்து உயர்ந்த மரங்களின் நிழல் ஆற்றின் நீரில் விழுந்து கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தான். மரங்களின் அந்த நிழல் அவன் மனத்தில் சிக்கறுக்க முடியாத சிந்தனையைத் தூண்டி விட்டது.

மானிட வாழ்வு உண்மையானதா? அல்லது ஆற்றின் நீரில் விழுந்துள்ள மரங்களின் நிழலைப் போல் பிரமையானது தானா? இகலோக வாழ்க்கை என்பது என்ன? உண்மையானதா? வெறும் பிரதி பிம்பம் மட்டுமேதானா? — இம்மாதிரி யோசனையில் அவன் ஈடுபட்டிருந்தான்.

"என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" பின்னாலிருந்து வந்த மென்மையான குரல் சுதாகரின் யோசனையைக் கலைத்தது. சுதாகர் திரும்பிப் பார்த்தான். சாந்தா அவனுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தாள்.

"ஒன்றும் இல்லை. சும்மா உட்கார்ந்திருக்கிறேன்!" என்றான் சுதாகர்.

"சும்மா உட்கார்ந்திருக்கிறீர்களா? இல்லை, யாரையாவது தேடிக் கொண்டிருக்கிறீர்களா?" என்று கேட்டாள் சாந்தா.

"சும்மாத்தான் உட்கார்ந்திருக்கிறேன்!"

"பொய்! எனக்குத் தெரியும்."

"என்ன தெரியும்?"

"நீங்கள் மனோரமாவைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள் என்று!"

"ஆனால் இனி தேடினாலும் அவள் கிடைக்க மாட்டாளே!"

"மறுபடியும் எதற்காகப் பொய் சொல்லுகிறீர்கள்! மனோரமாதான் கண்களெதிரிலேயே காட்சி யளித்துக் கொண்டிருக்கிறாளே!" என்றாள் சாந்தா.

"எங்கே? எனக்குத் தெரியவில்லையே!" என்றான் சுதாகர்.

"யாரிடமும் சொல்வதில்லை என்று சொல்லுங்கள். நான் காட்டுகிறேன்!"

"சொல்ல வில்லை. காட்டு, பார்ப்போம்!"

"சரி. இப்படி என்னைப்போல் கண்களை மூடிக் கொள்ளுங்கள்!" என்று சொன்ன சாந்தா கண்களை எப்படி மூடிக் கொள்ள வேண்டும் என்பதையும் சொல்லிக் கொடுத்தாள். பிறகு, "இப்பொழுது சொல்லுங்கள். மனோரமா தெரிகிறாளா, இல்லையா?" என்று கேட்டாள்.

சுதாகரின் இருதயம் நடுங்கியது. சாந்தா சொன்னபடி கண்களை மூடிய அவனுக்கு மனோரமா கண்களெதிரே பிரத்யக்ஷமாகக் காட்சியளிப்பது தெரிந்தது. மூடிய கண்களைச் சுதாகர் திறக்காமலே இருந்தான்.

"மனோரமா செத்து போய் விட்டாள் என்று எல்லோரும் சொல்லுகிறார்களே! அவர்களுக்கெல்லாம் ஒன்றும் தெரியாது என்பது இப்போதாவது தெரிகிறதா?" என்று கேட்டாள் சாந்தா. உலகம் எண்ணுவது தவறு என்பதை எடுத்துக்காட்டி எள்ளி நகையாடுவது போலிருந்தது அவள் பேச்சு.

அடுத்த நிமிஷம் சுதாகரின் முகத்தைப் பார்த்த சாந்தா திகைத்தாள். அவன் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாக வடிந்து கொண்டிருந்தது. அப்படி ஆறாக நீர் பெருகுவதற்கு என்ன காரணம் என்று அவளுக்குச் சரியாக விளங்க வில்லை. எனவே சந்தேகத்துடன், "மனோரமா தெரிய வில்லையா, என்ன?" என்று கேட்டாள்.

இரண்டு கைகளாலும் கண்களை மூடிக் கொண்டு சுதாகர் அழுதான், அழுதான்; அப்படி அழுதான். அழுது கொண்டேயிருந்தான். ஒருவேளை இப்பொழுதும் அவன் அழுது கொண்டுதான் இருக்கிறானோ என்னவோ, யார் கண்டார்கள்? (முற்றும்)

## * நாங்கள் அதிக அளவு வேலை செய்கிறோம்

### கான்டீன் நிறுவப்பட்டது முதல்

எல்லாவகை தொழிலாளருக்கும் — ஆபீஸில், வேலை நிலையத்தில், கான்டீனில், தேநீர் எப்போதும் கிடைக்கவேண்டும். முற்பகல், பிற்பகலில் தேநீர் பருக ஓய்வளிப்பதன் பலனை வர்த்தக, தொழில் தலைவர்கள் உணர்வர். தெம்பூட்டும் இப் பானத்தைப் பருக செலவிடும் 5 நிமிஷ நேரம், பிறகு பெருமளவு உற்பத்தியைப் பெருக்கும் என்பதை அவர்கள் அறிவர்.

* இந்தியா முழுதிலும் மத்திய டீ போர்ட் கான்டீன்களில் தினசரி 13.06.414 கோப்பை தேநீரை தொழிலாளர் பருகுகின்றனர்

**தேநீர்** ஒவ்வொருவருக்கும் புத்துயிரூட்டுகிறது.

மத்திய டீ போர்டு வெளியீடு.



CTB. 21 T



## ஒரு வினாடி கூட கவலை வேண்டாம்

சமநுள்ள, போஷாக்கு உணவை அருந்துவதற்கு அறிகுறியாக, அவனது புன்னகையும், உறுதியான அங்கங்களும், ஆரோக்கியமான உடம்பும் உள்ளன. இதை அவனுக்கு லாக்டோஜென் அளிக்கிறது. ஏனெனில் அவனது இயற்கை உணவான தாய்ப்பாலைப் போன்றது அது; லகுவாக ஜீரணமாகும்.




நம்புங்கள்

**LACTOGEN** லாக்டோஜென்

தாய்ப்பால் இல்லாதபோது

---

இலவச லாக்டோஜென் போல்டர் பெற இந்தக் கூப்பனை எழுதி தபாலில் இவ்விலாசத்துக்கு அனுப்புக:

*நெஸில்ஸ் புராடெக்ட்ஸ் (இந்தியா) லிட்., தபால் பெட்டி 396, கல்கத்தா.*

பெயர்..............................

விலாசம் ..............................

..............................

LG/Q/7

---

# B.I.S.N.CO.LTD.

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

## S. S. "ரஜுலா"

சென்னை புறப்படும் தேதி — 1954 மார்ச் 28உ.
நாகப்பட்டினம் புறப்படும் தேதி — 1954 மார்ச் 29உ.

கப்பல் புறப்படும் தேதியன்று காலை 6 மணிக்கு மேல் சாமான்கள் ஏற்றப்பட மாட்டாது

**கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள்:**

**சென்னையிலிருந்து 28-3-54:** *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 8 மணிக்கும் ஏனையோர் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

**நாகப்பட்டினத்திலிருந்து 29-3-54:** *பெர்த் வசதியற்ற டிக்கட்டுள்ளோர் காலை 6 மணிக்கும், ஏனையோர் டிக்கட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 28-3-54 பகல் 1 மணிக்கு மேல் வந்தால் வைத்திய பரிசோதனைக்கு தாமதமாகி விடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டி விருப்பதால் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இஞ்ஜெக்ஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிசிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லுபடியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி லிமிடெட் |
| 7, அரமனைக்காரத் தெரு, மதராஸ் | முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

# யார் புண்ணியவான்?

ரங்கா

கிணற்றங்கரையில் கல்யாணி குடத்தில் நீர் மொண்டு கொண்டிருந்தாள். உள்ளே அவளது மாமாவும் அம்மாமியும் பேசிக் கொண்டிருந்த விஷயங்கள் அவள் காதில் நன்றாக விழுந்தன.

"நீங்கள் ஆபீஸ் சென்றிருந்தபோது அவர் வந்து ரகுவின் ஜாதகத்தைக் கேட்டார். கொடுத்திருக்கிறேன். சாயங்காலம் வந்து உங்களுடன் கல்யாண விஷயங்கள் பற்றிப் பேசுவதாகச் சொன்னார்."

சிவராமய்யர் மௌனமாக இருந்தார்.

"பெண்ணைப் பொறுத்தவரை எவ்விதக் குறையும் சொல்வதற்கு இடமில்லை. இடமும் நல்ல செல்வாக்குள்ள இடம்தான். நிறைய ஆஸ்திபாஸ்தி இருக்கிறதாம். ஜட்ஜாக இருந்து ரிடையர் ஆனவராம்."

"காவேரி, நீ என்னமோ மளமளவென்று பேசிக் கொண்டே போகிறாயே, நம் கல்யாணியைப் பற்றிச் சிந்தித்தே பார்க்காமல்! உலகத்தில் பணமா பெரிது? ரகுவுக்கு வேறு பெண் நாம் ஏன் தேடவேண்டும்?"

"எனக்கு இருப்பதோ அவன் ஒரே பிள்ளை. நல்ல சீரும் செனத்தியும் வந்து பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசையாயிராதா?" என்று சொன்ன காவேரி கண்ணைக் கசக்க ஆரம்பித்து விட்டாள்.

"காவேரி! உனக்கு ஆசை யிருப்பது இயற்கைதான். அதை நான் தடுக்க வரவில்லை. இருந்தாலும் நம் குழந்தைபோல் நம்மிடம் வளர்ந்து விட்டாள் கல்யாணி. அனாதைக் குழந்தை, பாவம்! நம்மை விட்டால் அவளுக்கு வேறு யார் இருக்கிறார்கள்?"

உணர்ச்சி வசப்பட்ட சிவராமய்யரின் பேச்சு தடைப் பட்டது.

"கல்யாணியைப் பற்றி நான் நினைக்காமலா இருக்கிறேன்? அவள் என் குழந்தை மாதிரிதான்! போன மாதம் என் தம்பி வந்திருந்த போதே அவளைப் பற்றி ஜாடைமாடையாகக் கேட்டான். அவனுக்கு வயது நாற்பதுதானே ஆகிறது? முதல் தாரத்துக்கு ஒரே பிள்ளைதான். கல்யாணியை ராஜாத்தியாட்டமாக வைத்துக் கொள்வான்."

கல்யாணியின் குழந்தை உள்ளம் அந்தச் சம்பாஷணையைக் கேட்டதும் துணுக்குற்றது. தன் அருமை அம்மாஞ்சி தனக்கே சொந்தம் என்றல்லவா கனவுகண்டுகொண்டிருந்தாள்!

கல்யாணி, நீ பைத்தியம் போல மனக் கோட்டை கட்டி விட்டாய், முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படும் கதையாக. ரகு எங்கே, நீ எங்கே? அவனோ மெத்தப் படித்தவன். பணக்காரனும்கூட. அவனுக்குப் போட்டி போட்டுக் கொண்டு 'நான் நீ' என்று எத்தனையோ பணக்காரப் பெண்கள் வரத்தான் செய்வார்கள். இதை யெல்லாம் நீ ஏன் சிந்தித்துப் பார்க்க வில்லை?

சிந்தித்துப் பார்ப்பதா? அவள் தன் அன்பு, ஆசை, நினைவு அத்தனையையும் அருமை அம்மாஞ்சியிடம் அல்லவா வைத்திருந்தாள்!

அன்றும் அவள் இணற்றங் கரையிலிருந்த போது ரகு அங்கே வந்தான்.

"கல்யாணி, என் பனியனையும் வேஷ்டியையும் இங்கே வைத்திருக்கிறேன். சோப்புப் போட்டு வைக்கிறாயா?" என்று கேட்டான்.

அவனைப் பார்த்தால், அவளை ஒரு வித வெட்கம் வந்து கவ்விக் கொள்ளும். ஆனாலும் அவனிடம் உள்ள அன்பு வெட்கத்தையும் மிஞ்சி வருவது போல அவளே உணர்வாள்.

"ஆகட்டும், அம்மாஞ்சி!" என்று தலையசைத்தாள் கல்யாணி.

"நான் வந்து துவைத்துக் கொள்கிறேன். நீ சோப்பு மட்டும் போட்டு வை, போதும்" என்றான் அவன்.

"நானே துவைத்து விடுகிறேனே, அம்மாஞ்சி!"

"ஊஹூம்! நான் சொன்னால் நீ கேட்கணும். அப்புறம் எனக்குக் கோபம் வரும்!" இவ்விதம் சொல்லிய ரகு சிரித்துக் கொண்டே அங்கிருந்து சென்று விட்டான்.

கல்யாணி யோசனை செய்தாள். அம்மாஞ்சியை மறந்து விடணுமா? அவளுக்குத் தன் பிஞ்சு உள்ளத்தை யாரோ கசக்கிப் பிழிவது போல் இருந்தது. ரகுவுக்குப் பெரிய இடத்தில் கல்யாணம் ஆகவேண்டும் என்பதற்காக அவள் தன் வாழ்க்கையைத் தியாகம் செய்து கொள்வது என்று தீர்மானித்தாள். அம்மாமியின் தம்பியை அன்று வந்திருந்த பொழுது அவள் பார்த்திருந்தாள். தகப்பனார் போல் தோன்றிய அவருக்குச் சிசுருஷை செய்து தனது வாழ்வை அர்ப்பணம் செய்து கொண்டால் போயிற்று என்ற முடிவுக்கும் வந்தாள்.

ஆனால் ரகுவின் புன்னகை தவழும் முகம் அவள் கண் முன்னே வந்து நின்றது. கல்யாணி உள்ளுக்குள்ளே வேதனையால் சோர்ந்து துன்பக் கடலில் மூழ்கினாள்.

அன்று சாயங்காலம் பெண்ணின் தகப்பனார் வந்து சிவராமய்யருடன் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுச் சென்றார். கூடிய சீக்கிரம் அவர் கடிதம் எழுதுவார் என்றும், ரகுவைப் பெண் பார்ப்பதற்கு அனுப்ப வேண்டுமென்றும் சொன்னார்.

ரகு இன்னும் சில நாட்களில் வேறு ஒருத்தியின் புருஷனாகி விடுவான். தன்னை மறந்தே

விடுவான்! அதற்குமேல் நினைத்துப் பார்க்க முடியவில்லை கல்யாணிக்கு!

ஒரு நாள் அவர்கள் வீட்டில் எல்லோரும் சினிமா பார்த்து விட்டு வந்திருந்தார்கள். ரகுவின் தாயார் திரைப் படத்தில் கண்ட கதாநாயகி அழகே அவதாரமாக இருந்தாள் என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

"போ, அம்மா! செயற்கை அழகினால் ஏற்பட்டவை அந்த மினுக்கும் வசீகரமும். நம் கல்யாணியைப் பார், இயற்கையாகவே எவ்வளவு களையுடன் இருக்கிறாள்!" என்றான் ரகு. அவன் தாயார் அவன் கூறுவதை ஆமோதிப்பதுபோலச் சிரித்தாள். கல்யாணிக்கு இவையெல்லாம் ஞாபகம் வந்ததும் துக்கத்தை அடக்கவே முடியவில்லை. அவளது தலையணை கண்ணீரினால் நனைந்தது.

ஒரு வாரம் சென்றது. சிவராமய்யர் தமக்கு வந்த அந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் கோபாக்கினி ஜ்வலித்துக் கொண்டிருந்தது.

கடிதத்தில் கண்டிருந்ததாவது:—

ஐயா,

கண்ணியமானவர் என்று நினைத்து உம்மை அணுகிப் பெண்ணை கேட்க வந்தேன். உமது அயோக்யத்தனம் இப்போதுதான் வெளியாகியது. செவிட்டுப் பெண்ணை என் தலையில் கட்டிவிட எண்ணினீர். ஒரு மொட்டைக் கடிதம் எனது நலனுக்காகக் கிடைத்தது. முதல் நம்பர் செவிடு உமது மகள் என்பதைப் பட்டவர்த்தனமாகத் தெரிந்து கொண்டேன். கடவுள் அருளால் உமது சம்பந்தத்திலிருந்து தப்பினேனே, அதுவே போதும்!

மஹாதேவய்யர்.

"பணம் பணம் என்று குதித்தாயே! இதோ பார், உன் சம்பந்தியினுடைய லட்சணத்தை!" என்று கூறிக் கொண்டே தம் மனைவியிடம் வந்திருந்த கடிதத்தை வீசி எறிந்தார் சிவராமய்யர்.

கடிதத்தைப் படித்ததும் காவேரியம்மாளுக்கு உலகமே சுழலுவது போலத் தோன்றியது. தன் அருமை மகளைப் பற்றி அதில் எழுதியிருந்ததை அவளால் தாங்கவே முடியவில்லை.

தனக்கு இந்தத் தண்டனை வேண்டியதுதான் என்றே நினைத்துக் கொண்டாள் காவேரி. கையிலே அருமையான குத்து விளக்கைப் போன்ற கல்யாணியை வைத்துக் கொண்டு, மதியிழந்து பணத்துக்கும் பகட்டுக்கும் ஆசைப்பட்டோமே என்றும் அங்கலாய்த்துக் கொண்டாள்.

தம்பதிகளான பின்பு கல்யாணியும் ரகுராமனும் பேசிக் கொண்டிருந்தனர்.

"கல்யாணி! என்னைப் பற்றி யார்தான் கடிதம் எழுதினார்களோ?"

"யாராக இருந்தாலும் அந்தப் புண்ணியவான் நன்றாக இருக்கணும். அக் கடிதத்தினால் உங்கள் பெயருக்குச் சிறிது இழுக்கு ஏற்பட்டாலும், நீங்கள் எனக்குக் கிடைத்தது அதனால்தானே?"

"கல்யாணி! நீ இவ்வளவு அசடாக இருப்பாய் என்று நான் நினைக்கவே இல்லை!" அதைக் கூறும் போது ரகுவுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்து விட்டது.

கல்யாணி திகைத்துப் போனாள்.

"அம்மாஞ்சி, நிஜமாக நீங்களா எழுதினீர்கள்?" என்று கேட்டாள்.

"ஆமாம், கல்யாணி! அவர் அந்தக் கடிதத்தைப் பார்த்து விட்டுத்தான் என்னைத் தனிமையாக ஓரிடத்தில் வந்து பார்த்துப் பேசினார். நான் செவிடு மாதிரி நடித்தேன்.

## இப்படியும் நடக்கலாம்!



அல்லிக்குளத்தின்...!
அருந் தென்றல்!

CHARI-

Phoenix

# போனிக்ஸ் விசிறிகள்

EWI

**RM. S. & CO. LTD., 16, BROADWAY, MADRAS. 1.**

BRANCHES: 5, WEST TOWER ST., MATHURAI...10/75, PARK RD., VIJAYAWADA. 1.

---

## இதைப்போன்ற டூத் பிரஷ் வேறில்லை!

**உங்களுக்கேற்ற டிசைன்! உங்கள் வாய்க்கு பொருத்தமானது!**

பற்களை உறுதிப்படுத்தும் புது அம்சங்கள்

- முற்றிலும் ஸ்டரிலைஸ் செய்யப்பட்டது
- கால்கேட் டூத் பிரஷ்களின் ஹாண்டில்கள் தனி வர்ண முள்ளவை; உங்களுக்கு ஏற்றதை லகுவில் அறியலாம்
- பிளாஸ்டிக் ஹாண்டிலில் நிஜ நைலான் நார்கள்
- மிருதுவாக பாலிஷ் செய்கிறது; இனாமல் சிதையாது
- பல் ஈறுகளை மிருதுவாகத்தடவி உறுதிப்படுத்துகிறது

குழந்தைகளுக்கு

ஸ்திரீகளுக்கு

ஆண்களுக்கு

2 சைஸ்கள்
பெரியவர்களுக்கு குழந்தைகளுக்கு
ஷார்ட், மீடியம், சாஃப்ட் டஃப்ட்ஸ்

COLGATE
NYLON TOOTH BRUSH
AN EXCELLENT QUALITY TOOTH BRUSH WITH GENUINE NYLON BRISTLES FIRMLY FASTENED

# கால்கேட்

## நைலான் டூத் பிரஷ்

"துவண்டு" போவதில்லை

அதன் விளைவுதான் அப்பாவுக்கு அவர் எழுதின கடிதம். இப்பொழுது புரிந்ததா?"

"அம்மாஞ்சி, நீங்கள் மாத்திரம் என்னை அப்போது கை விட்டிருந்தால்......"

கல்யாணி நாத் தழு தழுக்கக் கூறினாள்.

"அவர் நீதிபதியாகவே இருக்கட்டும், ஆண்டியாகவே இருக்கட்டும், உன்னை உதறித் தள்ளி விட்டு, நான் வேறு பெண்ணின் கையைப் பிடித்து விடுவேனா? ஏன், கல்யாணி! நாளைக்கு நமக்கு ஒரு சின்னப் பயல் பிறக்கிறான் என்று வைத்துக் கொள். அவனிடம் இந்த விஷயத்தைச் சொன்னால் சிரிப்பான், இல்லையா?" என்று கேட்டான் ரகு. அதைக் கேட்ட கல்யாணியின் கன்னத்தில் வெட்கம் குமிழியிட்டது.

# படித்துப் பாருங்கள்!

## 1. நாட்டுக்கு ஒரு புதல்வர்
## 2. பாரதி பிறந்தார்!
## 3. தாகூர் தரிசனம்

அறிவும் அநுபவமும் வாய்ந்த பெரியோர்களின் வாழ்க்கை நமக்கு வழிகாட்டி; அவர்கள் வாக்கு நமக்கு உபதேசம்.

நம் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகக் கொள்ளக் கூடிய பெரியோர்களில் நம் ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்கள் மிகச் சிறந்தவர்; அரசியல் துறையில் பல்லாண்டுகளாகத் தொண்டாற்றி வரும் தீர்க்கதரிசி; மக்களின் நல்வாழ்வையே தமது குறிக்கோளாகக் கொண்டு, கவர்னர் ஜெனரல் பதவியிலிருந்து, மாகாண முதல் மந்திரி பதவி வரையில் விருப்பு வெறுப்பு இன்றி ஏற்று நிர்வகித்து வரும் தியாக சிகரம்; மண் குடிசை வாழ்வையும், மாளிகை வாழ்வையும் ஒன்றாக நினைக்கும் தீனபந்து.

அப்பேர்ப்பட்ட மகானின் வாழ்க்கை வரலாற்றை ஓரளவேனும் அறிந்துகொள்ள எவரும் விரும்புவது இயல்பு. அவர்கள் "நாட்டுக்கு ஒரு புதல்வர்" என்ற நூலைப் படிக்க வேண்டும்.

இந்நூலில் ராஜாஜியின் இளமைப் பருவம், வழக்கறிஞர் வாழ்வு, அரசியல் தியாக வாழ்வு, மற்றும் அவரது பொது வாழ்வில் நிகழ்ந்த சில சுவாரஸ்யமான நிகழ்ச்சிகள், நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காக அவர் மேற்கொண்ட பொறுப்புகள் ஆகியவை கூறப்பட்டிருக்கின்றன. சேலத்தில் வக்கீலாக இருந்த ராஜாஜி கொஞ்சம் கொஞ்சமாக அரசியலில் ஈடுபட்டுக் கடைசியில் காந்தி அடிகளின் அறப்போரின் முன்னணியில் நின்று மாபெரும் தியாகம் புரிந்த வரலாறுகள் ரஸமாக இருக்கின்றன. விலை ரூ. 1-10-0.

மகா கவி பாரதியார், திரு. வி. கல்யாணசுந்தரனார், தீரர் சத்தியமூர்த்தி, தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், ரஸிகமணி டி. கே. சி., ஆஸ்தான கவி நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை முதலியவர்களைப் பற்றிப் பொதுவாக எல்லோருக்கும் தெரியும். மேலே கூறியவர்களைப் பற்றி ருசிகரமான நிகழ்ச்சிகள் நிறைந்த கட்டுரைகள் "பாரதி பிறந்தார்" என்னும் கட்டுரைத் தொகுதியில் அடங்கியிருக்கின்றன.

மகா கவி பாரதி பிறந்த எட்டயபுரத்தில் தமிழ்ப் பெருமக்களின் பேரார்வம் காரணமாக எழுந்துள்ள பாரதி மணி மண்டப அஸ்திவார விழா "பொழுது புலர்ந்தது" என்னும் கட்டுரையில் கூறப்பட்டிருக்கிறது. "கம்பரும் நாமும்" என்ற கட்டுரையில், கம்பரின் கவிதை நயங்களையும், டி. கே. சி. அவர்கள் கம்பருக்கும் தமிழுக்கும் செய்திருக்கும் மாபெரும் சேவையையும் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது. நூலாசிரியர் கடமுவ பாலத்தைக் கடக்க முடியாமல் தவித்த தவிப்பு படிப்பதற்குச் சுவாரஸ்யமாயிருக்கிறது.

டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் தமிழ் இலக்கியங்கள் அழிந்து போகாமல் காப்பாற்றித் தந்ததையும், அவர் சேவையின் சிறப்பையும் நகைச் சுவையுடன் சொல்லுகிறது, "வீழ்ந்த ஆலமரம்" என்னும் கட்டுரை. விலை: ரூ. 3-0-0.

உலகப் புகழ் பெற்ற அமர கவி ரவீந்திரநாத தாகூரைப் பற்றி அறியாதவர்கள் இல்லை. அவர்களது உன்னதமான வேத கால வாழ்வும், சாந்தி நிகேதனம் என்னும் அவர்களது பிரசித்தி பெற்ற குருகுலமும் யாவரும் அறிந்தவையே.

மேற்படி சாந்தி நிகேதனத்தில் தமிழ் நூல் நிலையம் திறந்து வைக்கும் புனித சேவையை ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் சில ஆண்டுகளுக்கு முன் செய்தார். அந்தச் சுவை நிறைந்த நிகழ்ச்சி "தாகூர் தரிசனம்" என்னும் நூலின் முதல் கட்டுரையாக அமைந்திருக்கிறது.

"சுதந்திரத் தலைநகரம்" என்னும் கட்டுரையில் புது டில்லி நகர அமைப்பு, பழைய டில்லியின் சில ரஸமான பகுதிகளைப் பற்றிய ருசிகரமான வரலாறுகள் எல்லாம் மிகவும் சுவாரஸ்யமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

"அஜந்தா மார்க்கம்" என்னும் கட்டுரையில் எத்தனை எத்தனையோ ஆண்டுகளாக அரிய கலைப் பொக்கிஷமாகப் பாதுகாக்கப் பட்டு வரும் அஜந்தா குகைச் சிற்ப சித்திரங்களைப் பற்றிய பல விவரங்கள் காணப்படுகின்றன. உலகெங்கணும் சுற்றினாலும் காண முடியாத புதுமை வாய்ந்தவை அஜந்தாவின் அழியாப் புகழ் பெற்ற சித்திரங்கள். குன்றைக் குடைந்து கோவிலாக்கும் கலை நம் நாட்டின் மிகப் பழைய கலை. அந்த அபூர்வ கலையின் அழகை "அஜந்தா மார்க்கம்" என்னும் கட்டுரை அழகாக எடுத்துச் சொல்லுகிறது.

"சரபோஜியின் கலைக் கோவில்" என்னும் கட்டுரை, தஞ்சாவூர் ராஜ்யத்தை ஆண்டு வந்த பழமையான பெருங் குலத்தில் வந்த சரபோஜி மன்னரைப் பற்றிய நிகழ்ச்சியைக் கூறுகிறது; கோட்டை விழுந்து தலைநகரம் பிடிபட்டுப் போன நிலையிலும், அரண்மனை வாழ்வும் அரச போகமும் அனுபவித்துக் கொண்டிருந்த நிலையிலும், தம் நூல் நிலையத்தை விட்டு வெளிவராமல் கட்டிக் காத்த மாபெரும் கலைஞர் சரபோஜி மன்னரின் தியாக வாழ்வைப் பற்றியும், கலையார்வத்தைப் பற்றியும் இக்கட்டுரை கூறுகிறது. சித்த வைத்தியம், சங்கீதம், சிற்பம் முதலிய அரிய கலை நூல்களின் உறைவிடமான தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தைப்பற்றி இக்கட்டுரையில் சுவாரஸ்யமான சரித்திர அடிப்படை வரலாறுகள் அடங்கியிருக்கின்றன.

மேற்கூறிய நான்கு கட்டுரைகளும் சேர்ந்த "தாகூர் தரிசனம்" என்னும் நூலின் விலை: ரூ. 1-9-0. ஆசிரியர்: "கல்கி"; நூல்கள் கிடைக்கும் இடம்: பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17.

"அற்புதமான ஐந்து வருடங்கள்! உற்பத்தியைப் பெருக்கி உருவாக்க வேண்டிய காலம்! என் குழந்தைக்கு ஆரோக்கிய விருத்தியும் இலவசப் படிப்பு வசதியும் இனி கிடைக்கும். மேலும் கஷ்டப்பட்டு உழைத்தால் எங்களுக்கென ஒரு வீடும் கட்டிக்கொண்டு கவலையற்று வாழலாம்."

ஐந்து வருடத் திட்டத்தின் தொகையில் சுமார் கால்பாகம் பொது ஜன சேவையை மேலும் விஸ்தரித்து மேம்பாடடையச் செய்வதற்காகச் செலவிடப்படும். 13,000 புதிய டாக்டர்களுக்கும், 20,000 நர்ஸுகளுக்கும் பயிற்சி அளித்து, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக 425 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 1956-ம் வருடத்திற்குள் ஆறு வயதிற்கு மேற்பட்ட சிறுவர்களில் 60 சதவிகிதத்துக்கு மேல் நமது 2,02,142 ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்பார்கள். இந் நெடுநாளைய திட்டம் நம் வருங்கால வாழ்க்கையில் நம்பிக்கையை திடப்படுத்துகிறது. உண்மையில் இதுவே....

## வருங்காலத்திற்கு ஓர் வாக்குறுதி

**இவ்வைந்து வருடத்திட்டத்தின் பல்வேறு சாதனங்களில் பல்லாயிரக் கணக்கான டன் எஃகு உபயோகிக்கப்படும். ஆதலால் நம் நாட்டு மக்களின் வருங்கால வாழ்க்கையை செழிப்புறச் செய்வதில் எஃகானது எண்ணற்ற விதங்களில் ஈடுபடும்.**

**தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**





## சிக்கனத்திற்கும் பந்தோபஸ்துக்கும்

சூப்பர் இந்தியா டயர்களினால் உள்ள இரட்டிப்பு ஆதாயம்

### கார்களுக்கு

சுகமான சவாரி
மற்றும்
பந்தோபஸ்து




### லாரிகளுக்கும் பஸ்களுக்கும்

உறுதியான உழைப்பு
மற்றும்
சிக்கனம்

"டயர்களில்
மிகச் சிறந்தவை"

# சூப்பர் இந்தியா

# அழியா அழகு

பீஷ்மன்

வேகமாக ஓட்டி வந்த பஸ்ஸைச் 'சடக்' கென 'பிரேக்' போட்டு டிரைவர் நிறுத்திய போது, பிரயாணிகள் அத்தனை பேரும் ஒரு முறை குலுங்கி விழுந்தனர். ஜகந்நாதன் அந்த இடத்தில்தான் இறங்க வேண்டும். அவன் விருப்பம் இன்றியே வளர்ந்து விட்ட தன் பூதாகாரமான ஆகிருதியைச் சுமக்க முடியாமல் சிரமப்பட்டு எழுந்து, இறங்குபவர்களுக்கும் ஏறுபவர்களுக்கும் இடையே நடக்கும் போட்டியில் இடிபட்டு வழி வகுத்துக் கொண்டு இறங்கினான்.

அந்த அவசரத்தில் பின் பக்கத்துப் பெஞ்சின் கோடியில் உட்கார்ந்திருந்த நாரீமணியின் கையிலிருந்த அழகிய தோல் பையைத் தட்டிவிட்டான். அவள் வெறுப்புடன் குனிந்து அதை எடுத்துக் கொண்டு அவனை எரிப்பதுபோல் பார்த்தாள்.

"மன்னிக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டு அவன் எப்படியோ இறங்கி விட்டான்.

"ஆளைப் பாரு, பூதம் மாதிரி! இனிமேல் சதைப் பிடிக்க உடம்பிலே இடமே இல்லை!"

அந்தப் பெண் சொல்லிக் கொண்டிருப்பது அவனுக்குத் தெளிவாகக் கேட்டது. அதைத் தொடர்ந்து கடைசி பெஞ்சில் உட்கார்ந்திருந்த கல்லூரி மாணவிகள் அத்தனை பேரும் சேர்ந்து சிரிக்கும் ஒலியும் கேட்டது.

அவனுக்குக் கோபமும் எரிச்சலும் பொத்துக் கொண்டு வந்தன. பஸ் புறப்பட்டு விட்டது.

தன்னைத் தானே ஒரு முறை நன்றாகப் பார்த்துக் கொண்டான் அவன். இருபத்தெட்டு வயது இளைஞன் என்று அவனை யாராவது சொல்ல முடியுமா! கைகளிலும் உடம்பிலும் கொழு கொழு என்று எப்படி இந்தச் சதை பிடித்தது! அவனுக்கே தன் சரீரத்தின்மீது வெறுப்பு ஏற்படத்தான் செய்தது.

நான்கு வருடங்களுக்கு முன்னிருந்த தன் உருவத் தோற்றத்தை நினைத்துப் பார்த்துக் கொண்டே வீட்டை நோக்கி நடந்தான் அவன்.

எப்போதுமே ஒல்லியான தேகமில்லை அவனுக்கு. நல்ல இரட்டை நாடி சரீரம்! நல்ல சிவப்பு! சுருள் சுருளான கிராப்பு!

இப்படித்தான், அவன் வனிதாவைப் பெண் பார்க்கச் சென்ற அன்று அவன் நண்பன் ரகுராமன் அவனை வர்ணித்தான்.

வனிதா அவன் எதிர்பார்த்ததற்கு மேலேயே நல்ல அழகியாக இருந்தாள். பிரமாதமான படிப்பு இல்லாத போனாலும் எஸ். எஸ். எல். ஸி. தேறி இருந்தாள்.

கடைந்தெடுத்த தந்தப் பொம்மை உயிர் பெற்று நடந்து வருவது போன்றுதான் அவனுக்குத் தோன்றியது, அவள் அவனுக்கு வணக்கம் தெரிவிக்க வந்தபோது.

பெண்ணை அவனுக்கு மிக மிகப் பிடித்துப் போய் விட்டது. அன்று மாலை ரகுராமனும் அவனும் கடற்கரைக்குப் போயிருந்தபோது, அவர்கள் பேச்சு முற்றிலும் இந்தப் 'பெண் பார்த்த படலத்தை'ப் பற்றியதாகவே இருந்தது.

"எனக்குப் பிடித்திருக்கிறதெல்லாம் சரி தாண்டா, ரகு. அவளுக்கு உண்மையிலே மனப்பூர்வமாக என்னைப் பிடித்திருக்க வேண்டாமா! இதை நேரிலே தெரிந்து கொள்ளுவது நல்லது என்று படுகிறது!" என்றான் ஜகந்நாதன். ரகு இதை ஆமோதித்தான்.

அதன்படியே ஜகந்நாதனை அழைத்துக் கொண்டு மறுநாள் அங்கே பெண் வீட்டுக்குப் போனான் ரகுராமன். பெண்ணின் தகப்பனாரிடம் விஷயத்தைத் தெரிவித்த போது அவருக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

"அவளுக்கு விருப்பமில்லாத ஒரு காரியத்திலும் நான் தலையிடக்கூட மாட்டேனே! ஏன், நீங்களே நேரிலே தாராளமாகக் கேட்கலாம்!" என்று ரகுராமனிடம் கூறிவிட்டு உட்புறம் திரும்பி "வனிதா! இங்கே கொஞ்சம் வா அம்மா!" என்று குரல் கொடுத்தார்.

நாணத்தின் செம்மை முகத்திலே நிறம் பூச, அவர்கள் எதிரே வந்து நின்றாள் வனிதா.

அவள் அப்பா திடீரென, "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிவிட்டு அவர்களைத் தனியே விட்டு விட்டு உட்புறம் சென்றுவிட்டார்.

ஜகந்நாதனால் இந்த இக்கட்டான நிலைமையைச் சற்றும் சமாளிக்க முடியவில்லை. அவன் முகத்தில் ஏதோ காரணமற்ற 'அசடு' பொங்கி வழிந்தது. வனிதாவின் நிலையும் ஏறக்குறைய அப்படித்தான் இருந்தது.

ரகுராமன் இந்தப் 'பிரமை'யை ஒருவாறு சமாளித்து விட்டான்.

"கல்யாணம் முக்கால் வாசி ஆனமாதிரிதான். பெரியவர்களெல்லாம் ஒத்துப்போய் விட்டார்கள். ஒரு விஷயம் ரொம்ப முக்கியம். மனப்பொருத்தம் இல்லையானால் கல்யாணத்துக்கு அர்த்தமேயில்லை. ஜகந்நாதன் என்னை ஒரேயடியாக நிர்ப்பந்தப் படுத்தி விட்டான். 'இந்தக் கல்யாணத்திலே உங்களுக்குப் பூர்ண சம்மதம்தானா?' என்று தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறான். இதிலே வெட்கப்படவோ கூச்சப்படவோ ஒன்றும் இல்லை. ஆயிரங்காலத்து விஷயம்! மனசிலிருக்கிறதைத் தாராளமாய்ப் பளிச்சென்று விட்டுச் சொல்லிவிட வேணும்!" என்றான் ரகு.

வனிதாவுக்குத் தலையிலிருந்து கால்வரை நடுங்கிக் கொண்டிருந்தது. வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. 'என்ன சொல்வது எப்படிச் சொல்வது' என்று தத்தளித்துக் கொண்டிருந்தாள் அவள்.

ஜகந்நாதன் இமை கொட்டாமல் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

வனிதா எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு விட்டாள். நாணம் சிவப்பேற்றிய முகத்தை மெல்ல நிமிர்த்தி, "எனக்கு முழுச் சம்மதம் தான்!" என்று எப்படியோ திக்கித் திணறிக் கூறிவிட்டு அங்கே நிற்கத் திறனில்லாமல் உள்ளே ஓடி மறைந்து விட்டாள்.

ஜகந்நாதன் முன் இப்போதுகூட நாணம் அழகு பூசிய வனிதாவின் அன்றையத் தோற்றம் நின்று கொண்டிருந்தது. ஏன், இன்றுகூட அவள் தோற்றத்தில் எந்த விதமான மாறுதலும் ஏற்பட்டு விடவில்லை.

அவன் சிந்தனை இப்படி ஓடுகையில் திடீரென்று தடைப்பட்டது.

'இந்த அரை குறை லட்சணமுள்ள பெண்களே என் பூத சரீரத்தைக் கேலி செய்யும்போது, வனிதா மட்டும் எப்படிச் சகித்துக் கொள்கிறாள்!'

அவன் தலையை வலித்தது. சொல்ல முடியாத வேதனை ஜுரவேகத்தில் உடலெங்கும் பரவியது.

மெள்ளத் தள்ளாடி நடை போட்டான் அவன்.

வீட்டுக்குள் அவன் நுழையும்போது, குத்து விளக்கை ஏற்றி அதன்முன் அந்தக் குளிரொளி

யில் அழகு பிம்பமாய், சாந்த வடிவமாய் வனிதா அமர்ந்து பாடிக் கொண்டிருந்தாள்.

எப்போதும் மாலை காரியாலயத்திலிருந்து வீட்டுக்கு வந்தால், உள்ளே நுழையும்போதே "வனிதா...!" என்று மகிழ்ச்சி பொங்க அழைத்தால்தான் அவனுக்குத் திருப்தியாய் இருக்கும். அன்று அவனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. மௌனமாய் நடந்து உள்ளே வந்தான்.

நிழல் தட்டுவதை உணர்ந்து வனிதா பாடுவதை நிறுத்திவிட்டு எழுந்தாள்.

"ஓ...!" என்று குதூகலத்துடன் ஒய்யாரமாக வந்த அவள் முகம், அவன் முகத்தில் பரவியிருந்த வேதனை நிழல் கண்டு கலங்கிப் போயிற்று.

"ஏன், உடம்புக்கு என்ன!" என்றாள்.

"தலையை ரொம்ப வலிக்கிறது!"

அவள் எப்போதும்போல் தான் அவனிடம் நடந்து கொண்டாள். அவன் மனம் தான் சதா எதையோ எண்ணிக் குழம்பியது. முன்னிருந்த கலகலப்பு அவனிடமிருந்து மெல்ல மெல்ல மறைந்து வெற்று மோனமாய் ஒடுங்கி விட்டது.

இந்த மாறுதல்கள் அவள் கண்ணுக்கும் தென்படாமல் போகவில்லை.

"காரியாலயத்தில் வேலை அதிகமோ, என்னவோ!" என்று நினைத்துக் கொண்டாள்.

ஒருநாள் அவள் அதைக் கேட்டே விட்டாள்.

"வேலை ரொம்ப அதிகம், வனிதா! மானேஜர் வேறு புது ஆள்! கஷ்டமாகத்தான் இருக்கிறது!" என்று மழுப்பினான்.

'அதுதான் காரணம்' என்று அவளும் தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டு விட்டாள்.

அவன் மனம்தான் எந்தவிதமான சமாதானத்துக்கும் வர மறுத்தது.

"என்னுடைய தோற்றமும் பருமனும் அவளுக்கும் பிடிக்காதுதான். ஆயினும் கட்டிய கணவனை விட்டுத் தள்ளிவிட முடியுமா!—கடமை என்று ஒன்றிருக்கிறதே! இப்பொழுது அவள் காட்டும் அன்பும் ஆசையும் அவள் உள்ளத்திலிருந்து வருபவைதானா! வனிதாகூட நன்றாக நடிக்கக் கற்றுக் கொண்டு விட்டாளே!" என்ற ரீதியில்தான் அவன் சிந்தனை ஓடியது.

அதற்கேற்றாற்போல்.

அன்று அவனுக்கு ஏதாவது படம் பார்க்கப் போகலாமே என்று தோன்றியது. 'வீட்டுக்குப் போனதும் வனிதாவையும் அழைத்துக் கொண்டு சினிமாவுக்குக் கிளம்பி விடலாம்!' என்று நினைத்துக் கொண்டான் அவன்.

வீட்டு வாசலில் நிலையில் ஒயிலாய்ச் சாய்ந்து கொண்டு அவன் வரவை எதிர்பார்ப்பதுபோல் நின்று கொண்டிருந்தாள் வனிதா.

"வனிதா, பலகாரத்தை முடித்துக் கொண்டு புறப்படத் தயாராயிரு! நாம் இப்போ வெளியே கிளம்பப் போகிறோம்!" என்றான் அவன்.

"எங்கேயாம்!"

"புதிதாக ஒரு படம் வந்திருக்கு! ரொம்ப நன்றாயிருக்காம். போய் வரலாம்!"

"எனக்குத் தெரியுமே! இந்தமாதிரி நான் வர முடியாத நாள் பார்த்துத்தான் என்னைப் படம் பார்க்கக் கூப்பிடுவீர்கள்!"

"ஏன்! உனக்கு இன்று என்ன வந்தது!"

"என் தோழி பத்மா இல்லை! அவள் தங்கை ஊரிலிருந்து இன்றுதான் வந்தாளாம். ராத்திரியே புறப்பட்டுப் போகிறாளாம்! பத்மா 'அவளை இப்போ அழைத்துக் கொண்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போனாள்."

"அப்போ நீ வரவில்லையா!"

அவள் கிணுங்கினாள்.

அவன் அவளை ஒன்றும் கேட்கவில்லை. "நான் வருகிறேன்!" என்று புறப்பட்டு விட்டான்.

'என்னுடன் வருவதற்கு அவளுக்கு வெட்கமாக இருக்கிறது. அதை மறைக்க ஏதோ காரணம்! சை!' நேரே தியேட்டருக்குத்தான் போனான், மனத்தின் பாரத்தை அங்கே இறக்கி விடலாம் என்ற நினைப்புடன். ஆனால், அங்கே அது இன்னும் அதிகமாக வளரத்தான் செய்தது.

ஜோடியாய், கணவனும் மனைவியுமாய் எத்தனை பேர்! படத்தில் மட்டும் அவன் என்னத்தைப் பார்த்தான்!—எல்லாம்...

படத்தை அவனால் நிம்மதியாய் ரசிக்க முடியவில்லை. தலைவலி அதிகமாயிற்று.

வனிதா வர மறுத்தது பெரிய குறையாய் அவன் மீது அழுத்தும்போது, தியேட்டரில் உட்கார்ந்து படம் பார்க்க அவனுக்குப் பிடிக்கவில்லை.

'இடைவேளை'யின்போதே கிளம்பி விட்டான்.

அவன் மனத்தைப் போலத் தெருவும் இருளில் மூழ்கிக் கிடந்தது.

மெதுவாக, யோசனைக் குழப்பத்தின் அழுத்தத்தில் அடிமேல் அடிவைத்து நடந்தான்.

வாசல் நடையில் கால் வைக்கும்போது உள்ளே அவன் மனைவியும் இன்னும் யாரோ ஒரு பெண்ணும் உரக்கச் சிரிக்கும் ஒலி கேட்டது.

'நான் இங்கே வேதனைப்பட்டுச் சாகிறேன். அவள் எத்தனை மகிழ்ச்சியுடன்......'

தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டு திண்ணையிலேயே உட்கார்ந்து விட்டான்.

உள்ளே சிரிப்பொலி மெல்ல அடங்கியது.

"விளையாட்டுக்குச் சொல்லவில்லை பிரேமா! நிஜமாகத்தான் சொல்கிறேன். உன் மனசு தெரிந்து நடக்கிற அகமுடையான் உனக்கு வாய்க்கணும்! அதுதான் என் ஆசை. அந்த விஷயத்திலே எனக்கு ரொம்பப் பெருமைதான். இதைச் சொன்னால் என்ன! என்னைப் பெண் பார்க்க வந்துவிட்டுப் போன மறுநாள் இவர் தன் சிநேகிதனோடு என் வீட்டுக்கு வந்தார். எதற்குத் தெரியுமா! உண்மையாய் எனக்கு அவரைப் பிடித்திருக்கா, என்று நேரிலே கேட்டுத் தெரிந்து கொள்ளத்தான்! இந்தக் குணம்தான் அழகு! என்றைக்கும் அழியாதது!......"

தொடர்ந்து உள்ளிருந்து சிரிப்பு அலைகள் எழுந்தன. அவனுள் குமைந்த இருளும் அந்த அலைகளில் அடிபட்டு ஓடிவிட்டதை உணர்ந்தான்.

"அந்த அழகு அழியாதது!" என்று அவள் சொன்னதைக் கேட்டதும் அவனுக்குத் தன் தவறான எண்ணம் தெளிவாகப் புலனாயிற்று.

அதற்குள் உள்ளிருந்து பேசிக் கொண்டே வனிதா, தன் தோழியுடனும் அவள் தங்கை பிரேமாவுடனும் வந்து விட்டாள்.

"அட! உள்ளே வரக்கூடாதா! ஏன், படத்துக்குப் போகவில்லையா!" என்றாள் வனிதா.

"நீ 'வரமாட்டேன்' என்று சொன்னப்புறம் அவர் தனியாகப் போவாரா!" என்று சொல்லிச் சிரித்தாள் பத்மா.

அவனும் சிரித்துக் கொண்டே எழுந்திருந்தான்.

ஏதோ கோளாறினால் அணைந்து போன தெரு விளக்குகள் பளீரென ஒளி வீசி உயிர் பெற்றன.

# கோடக் அளிக்கிறார்கள்—

# உங்களுக்கு குதூகலமூட்டும் 2 புதுமாடல்கள்—

## யாரும் வரவேற்கும்படியான விலையில்!



### அழகான தோற்றம்

உலோகத்தில் தயாரிக்கப்பட்டதான, வலுவான கேஸ். கறுப்பு நிறம். வசீகரமான முறையில் குரோமியம்ப்ளேட் செய்யப்பட்டிருக்கிறது. பலம் பொருந்தியதும், சிறந்ததும் நன்றாக பொருத்தப்பட்டதுமான பிட்டிங்ஸ். இதைவிட அழகான காமரா எந்த விலையிலும் தென்படாது!




அழகான தோற்றம்

சிறந்த சேவனம்

அவைகளை உங்கள் கோடக்

வியாபாரியிடம் சென்று பாருங்கள்!

### 'கோடக்' ஜூனியர் I காமரா

பாக்ஸ் காமராவைப் போலவே மிகவும் எளிதானது. 'ஜூனியரி'ன் போகஸிங் பாக்டரியிலிருந்து தானே சரிசெய்யப்பட்டு வருகிறது. மிக எளிதில் அவுட்-டோர் படங்கள் எடுக்கலாம். மங்கின ஒளியில் ப்ரீப்-டைம் எக்ஸ்போஷர்களும் மிக எளிதானது. ரூ. 76/-

லெதர் கேஸ் ரூ. 9/8/-



### ஐ-லெவல் வ்யூ பைண்டர்

லென்ஸ்-டைப் வ்யூ-பைண்டரில் நீங்கள் படம் பிடிக்க விரும்பும் வஸ்து மிக தெளிவாகவும் பிரகாசமாகவும் தெரிகிறது. எச்சமயத்திலும் உங்கள் உபயோகத்திற்கு தயாராக இருக்கிறது இந்த காமரா.

### 'கோடக்' ஜூனியர் II காமரா

பாஸ்ட்-லென்ஸ் (f/6.3) மங்கின ஒளியில் கூட மிக சிறந்த படங்கள் கிடைக்கும். பெரிய படங்களுக்கு 4 அடிவரை போகஸிங் கிடைக்கிறது. இரண்டு ஸ்னுப் ஷாட் - ஸ்பீடுகளுடன், டைம் எக்ஸ் போஷர்களும் கூட. இன்டோர் படங்களுக்கோ, அல்லது இரவில் படம் பிடிப்பதற்கோ ஒரு 'கோடக்' ப்ளாஷ் ஹோல்டரை பொருத்திக் கொள்ளுங்கள். ரூ. 115/-

லெதர் கேஸ் ரூ. 9/8/-

கோடக்' ப்ளாஷ் ஹோல்டர் மாடல் II விரைவில் கிடைக்கும்.







### தானாகவே திறக்கிறது

பொத்தானை அழுத்துங்கள் உங்கள் 'ஜூனியர்' காமரா தானாகவே திறந்துகொள்கிறது. அதேபோல் மீண்டும் நன்றாக அடைத்துவிடும். உங்கள் காமராவை போட்டோ எடுப்பதற்கு தயார் செய்வதற்காக நீங்கள் உங்கள் அவகாசத்தை வீண் செய்ய வேண்டியதில்லை.



### பெரிதான படங்கள்

உங்களுக்கு மிகவும் பிரியமான $2\frac{1}{4} \times 3\frac{1}{4}$ அங்குல ஸைஸில் எட்டு படங்கள் ஒரே ரோல் பிலிமிற்கும் கிடைக்கிறது. அவை உங்கள் ஆல்பத்தின் அழகை பன்மடங்கு அதிகரிக்கவைக்கும

### இன்னும் ஏராளமானவைகள்

எந்த தேவைகளுக்கும் யாருக்கும் பொருத்தமான ஏராளமான மாடல்களில் ரூ. 17/8/- லிருந்து விதவிதமான 'கோடக்' காமராக்கள் இருக்கின்றன. உங்கள் கோடக் வியாபாரியை விசாரியுங்கள் காண்பித்துத் தருவார்.

மேல் கொடுத்திருக்கும் விலைகளில் விற்பனைவரிசேராது.

## கோடக் லிமிடெட்

(இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)

பம்பாய் - கல்கத்தா - டில்லி மதராஸ்

K 9013

# வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

## மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!
✓ ஒளிவீசும் பற்கள்!
✓ சொத்தை குறையும்!




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள் :

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ்கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல்நுனி நோக்கி தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

TPG/14.

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**



# தேன்மொழியாள்

மணியம

8

நாடகக் கொட்டகையில் திடீர் என்று ஏற்பட்ட விபரீதத்தால் கூட்டத்தில் ஒரு குழப்பம் ஏற்பட்டு விட்டது. மக்கள் நாலாபுறமும் ஓடினார்கள். அதனால் கூட்டத்தில் அதிக நெருக்கடி உண்டாயிற்று. அதற்குள் நாடகக் கொட்டகையின் உள்ளே யிருந்த வேறு ஒரு 'கியாஸ் லைட்'டை வெளியில் கொண்டு வந்து மாட்டினார்கள். வெளிச்சத்தைப் பார்த்த ஜனங்கள் ஒவ்வொருவரும் அமைதியாக அவரவர்கள் இடத்தில் அமர்ந்தனர். இனியன் தேன்மொழி இருந்த பக்கம் ஆவலாகத் திரும்பிப் பார்த்தான்.

தேன்மொழியின் தந்தையும் இன்னொரு வாலிபனும் தேன்மொழியுமாக அங்கிருந்து கிளம்பிச் சென்று கொண்டிருந்தனர். அவனுக்கு அதற்கு மேல் அங்கு இருக்கப் பிடிக்கவில்லை. கூட்டம் மெதுவாகக் கலைய ஆரம்பித்தது. அவன் சற்றுப் பின் தங்கித் தேன்மொழியுடன் சென்ற அந்த வாலிபன் யார் என்று தெரிந்துகொள்ள விரும்பினான். தன் தந்தையிடம் பின்னால் வருவதாகச் சொல்லி விட்டுத் தேன்மொழியின் வீட்டை நோக்கிச் சென்றான். கொஞ்ச தூரம் சென்றவுடன் அவன் மனம் மாறி விட்டது.

அங்கு சென்ற யாரையோ அழைத்துத் தேன்மொழியின் தந்தையைக் கூப்பிட்டு வரச் சொன்னான். சாலையின் ஓரத்தில் இருந்த வாய்க்கால் மதகில் உட்கார்ந்து கொண்டான். அவன் சிந்தனை எங்கெல்லாமோ சென்று கொண்டிருந்தது. அவன் உள்ளத்தின் வேதனையை அவன் முகச் சுருக்கங்கள் எடுத்துக் காண்பித்துக் கொண்டிருந்தன.

தேன்மொழியின் தந்தை ஓட்டமும் நடையுமாக வந்தார். நாடகக் கொட்டகையின் கியாஸ் லைட் வெளிச்சம் தேன்மொழியின் தந்தையின் முகத்தில் பட்டது. அதனால் அவர் முகத்தை, அவர் முகத்தில் தோன்றும் உணர்ச்சி பாவங்களை இனியனால் நன்றாகப் பார்க்க முடிந்தது.

"இனியன் எதற்காகக் கூப்பிட்டாரோ! என்ன காரியமோ!" என்ற கேள்வியும் அதனால் ஏற்பட்ட திகைப்பும் அவர் முகத்திலே நன்றாகத் தெரிந்தது. சற்றுத் தூரத்தில் நின்றபடியே "ஏன் கூப்பிட்டீர்கள்!" என்று கேட்டார்.

இனியன் அவர் தோளைப் பிடித்து இழுத்துத் தான் உட்கார்ந்திருந்த வாய்க்கால் மதகுச் சுவரில் தன்னோடு அமர்த்திக்கொண்டு சொன்னான்.

"காலையில்தான் உங்களிடம் மனம் விட்டுப் பேசினேன். ஆனால் அதற்குள் தாங்கள் எனக்கு மாமனார் ஆகிவிட்டது போல் தோன்றுகிறது. கூச்சமோ, வெட்கமோ ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை. மனத்தில் தோன்றியதை யெல்லாம் உங்களிடம் சொல்லத் துணிந்து விட்டேன்."

"அப்படி இருக்க வேண்டியதுதானே!"

"என் தலை சுற்றுகிறது. எனக்கு நானே அன்னியனாகத் தோன்றுகிறது. என் மனத்தில் ஏதாவது சந்தேகங்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. முன்பெல்லாம், நேற்று வரையில் கூட நான் இப்படி இருந்ததில்லை. இப்போது மனத்தில் அமைதி இல்லை. அது கிடக்கட்டும், நாடகம் முடிந்து தேன்மொழியும் நீங்களும் வீட்டுக்குச் செல்லும்போது உங்களுடன் இன்னொரு வாலிபரும் வந்தாரே அவர் யார்!"

"அவன்தான் மாணிக்கம்."

"மாணிக்கமா!"

"ஆமாம்."

"அது யார் மாணிக்கம்!"

"தேன்மொழியின் அத்தை மகன்."

"தேன்மொழியின் அத்தை மகன் மாணிக்கமா! அவளுக்கு இன்னொரு அத்தை மகன் 'ரத்தினம்' என்று யாராவது இருக்கிறார்களா!"

"அப்படி யாரும் இல்லையே!"

"ரத்தினம் என்று தனக்கு ஒரு அத்தை மகன் இருப்பதாகத் தேன்மொழி சொல்லி யிருக்கிறாள். அவள் தாத்தாகூட அந்தப் பையனுக்கு வேலை தேடிக் கொடுக்க வேண்டும் என்றும் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தாரே."

"ஆமாம். அவனுக்கு ரத்தினம் என்ற பெயரும் உண்டு. ஆனால் வீட்டில் நாங்கள் எல்லாரும் அவனை மாணிக்கம் என்றுதான் கூப்பிடுவோம்."



"நல்ல வேளையாகப் போய் விட்டது. மாணிக்கம் என்றவுடன் நான் வேறு யாரையோ நினைத்து விட்டேன். என் சிநேகிதன் ஒருவன் பட்டணத்தில் இருக்கிறான். அவன் பெயரும் மாணிக்கம்தான். அவன் நினைவு எனக்கு வந்து விட்டது."

"நம் ஊரில்கூட அவனை எல்லாரும் மாணிக்கம் என்றுதான் கூப்பிடுவார்கள்."

"தயவு செய்து இனிமேல் அவனை ரத்தினம் என்றே கூப்பிடுங்கள். பெயரைப் போட்டுக் குழப்பாதீர்கள். அதனால் எனக்குத் தலையைச் சுற்றுகிறது" என்றான் இனியன்.



தேன் மொழியின் தந்தை அவனையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் தலையை ஆட்டிக் கொண்டே மெதுவாகப் பேசினார் :

"தங்கள் தந்தையிடம் தங்களுடைய திருமண விஷயமாக ஏதாவது பேசினீர்களா!"

"இனிமேல் தான் தைரியமாகப் பேசலாம். நாடகத்தின் முடிவில் அப்பா பேசியதைக் கேட்டுக் கொண்டு இருந்தீர்கள் அல்லவா!"

"ஆமாம். சொல்லுவது எல்லாருக்கும் சுலபம். சொன்னபடி நடக்க முடியுமா!"

"அப்பா அப்படியெல்லாம் சொன்ன சொல்லை ஒருநாளும் மாற்ற மாட்டார்."

"நீங்கள் சொல்லுவது எல்லாம் சரிதான். ஆனால் அது வேறு விஷயங்களில் இருக்கும். இக்காரியம் அப்படிப்பட்டதல்ல. கடவுள் பெயரால் உங்களிடம் கேட்கிறேன். நீங்கள் மிகவும் அருமையானவர்; நல்லவர். உங்கள் இருதயத்தைத் திறந்து காட்டி விட்டீர்கள். பயமில்லாமல் நீங்கள் பேசுகிறீர்கள். சத்தியத்தை நாடிப் புறப்பட்டு விட்டீர்கள். இதற்கு என் மகளைத்தானா தேர்ந்தெடுக்க வேண்டும்! நான் ஏழை, ஏதோ உழைத்துப் பாடுபட்டு உங்கள் பண்ணையில் இதுவரையில் மானமாக வாழ்ந்து வந்து விட்டேன்" என்றார் தேன்மொழியின் தந்தை.

அவர் உள்ளம் உடைந்திருந்தது. நெஞ்சு சுருங்கிப் போயிற்று. தொண்டை காய்ந்து வறண்டிருந்தது. தேன்மொழியிடம் அவர் வைத்திருந்த அன்பை அவர் சொன்ன ஒவ்வொரு சொற்களிலும் நன்றாகக் காண முடிந்தது. அந்த அன்பு காரணமாகத் தான் அவர் வேதனைப் பட்டார். தேன்மொழியின் திருமணத்தைப் பற்றி, இனியன் எவ்வளவு சொன்ன போதிலும் அவர் மனத்திலே அமைதி ஏற்படவில்லை. இனியனுக்கு எதிரில் ஏதோ ஒரு மாதிரி மனத்தைத் தேற்றிக் கொண்டாலும் அவனுக்குப் பின்னால் அவரால் அமைதியாக இருக்க முடியவில்லை. அதனால்தான் அவர் தன் மனத்தில் உள்ளதை இனியனிடம் சொல்லிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டார். கிடைத்த சந்தர்ப்பத்தில் அதைச் சொல்லியும் விட்டார்.

"மாமா. என்னை நம்புங்கள். தேன்மொழியின் இன்ப வாழ்வை நான் நிலை நிறுத்துகிறேன். நீங்கள் மனம் கலங்கி விடாதீர்கள். என்னை நடு வழியில் தனியே விட்டு விடாதீர்கள். எனக்குத் தெரியாதா! தேன்மொழிக்காக நீங்கள் ஆடா விட்டாலும் உங்கள் சதை ஆடும். அவள் மீது தாங்கள் கொண்டிருக்கும் அன்பினால்தான் கேட்கிறேன்.

"அவள் இதயத்தில் துடித்துக் கொண்டு இருக்கும் ஆசையை, வளர்ந்து கொண்டு இருக்கும் காதலை உணருங்கள். அவள் ஆசைக் காதலை நிறைவேற்ற வேண்டாமா! அதற்காகத்தான் நீங்கள் என்னோடு துணையாக நின்று வரவேண்டுமென்று கேட்கிறேன்" என்றான் இனியன்.

"உங்களோடு நிற்கிறேன். அவள் நல்வாழ்வுக்காக நான் எதையும் தியாகம் செய்யத் துணிந்து விட்டேன். அதைத் தான் காலையிலேயே சொல்லி விட்டேனே. இருந்தாலும் தம்பி! இந்தச் சாதி இருக்கிறது பாருங்கள். அது பொல்லாதது. அதன் வெறியில் நல்லவர்களும் தீயவர்கள் ஆகி விடுவார்கள். 'உயர்ந்த சாதி,' 'உயர்ந்த சாதி' என்ற எண்ணம் அவர்கள் இரத்தத்திலேயே ஊறிப் போயிருக்கும். அதைத் தாங்கள் நினைப்பதைப் போல் அவ்வளவு சுலபமாக மாற்ற முடியாது. அதனால்தான் அதைப்பற்றிச் சொன்னேன். நீங்கள் ஒன்றும் வித்தியாசமாக நினைத்துக் கொள்ள வேண்டாம். நான் வரட்டுமா தம்பி!" என்றார் தேன்மொழியின் தந்தை.

"சரி! நீங்கள் போய் வாருங்கள். நீங்கள் உங்களைப் பற்றித் 'தாழ்ந்த சாதி' என்ற எண்ணிக் கொண்டிருப்பதை மறந்து விடுங்கள். அதையே நினைத்து நினைத்து வீணாக மனத்தைப் புண்படுத்திக் கொள்ளாதீர்கள்" என்றான் இனியன்.

அவர் இனியனைப் பார்த்துக் கைகூப்பி வணங்கினார். அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்று விட்டார். சற்று நேரம் அவர் சென்ற திசையையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு இனியன் தன் வீட்டுக்குச் சென்றான். வழியில் அவன் உள்ளத்தில் தேன்மொழியின் தந்தை சொன்ன சொற்கள் ஒவ்வொன்றும் 'கணீர்' 'கணீர்' என்று ஒலித்துக் கொண்டே இருந்தன.

'அவரா மனத்தைப் புண்படுத்திக் கொள்கிறார். உனக்குப் புத்தி வர வேண்டும். சாதியின் ஏற்றத் தாழ்வின் கொடிய உருவத்தை நீ உணர வேண்டும் என்பதற்காக அல்லவா வார்த்தைகளால் உன்னை வாட்டியிருக்கிறார். இது தெரியவில்லையா உனக்கு!' என்று அவன் உள் மனசு அவனைக் கேட்டுக் கொண்டிருந்தது.

உடனே அவனுக்கு நாடக முடிவில் அவன் தந்தை பேசிய பேச்சு நினைவுக்கு வந்தது. அவருடைய கணீர் என்ற குரல் காதில் ஒலித்தது. அப்பொழுது இருந்த ஒரு நிலையை நினைத்தான். அப்படியே பெருமிதத்தில் ஆழ்ந்து போனான்.

மிகவும் மரியாதைக்குப் பாத்திரமான இனியனின் தந்தை எல்லாருக்கும் மத்தியில் கம்பீரமாக நின்றுகொண்டிருந்த காட்சியை நினைத்தான். எல்லாரும் அவர் பேச்சைக் கேட்டுக் கரகோஷம் செய்த குதூகலத்தை நினைத்தான்.

அவன் மனத்திலே தைரியம் ஏற்பட்டது.

ஏதோ பெரிய வெற்றி அடைந்து விட்டவன் போல நிமிர்ந்த மார்புடன் நடக்க ஆரம்பித்தான். அவன் மனத் திரையில் தேன்மொழியின் இனிய உருவம் தெரிந்தது. அவன் தன் முத்துப் பற்கள் தெரிய மோகனப் புன்னகை செய்தான். 'அடடா! இந்த ஒரு முல்லைச் சிரிப்புக்காகச் சாதி விட்டுச் சாதிதானா திருமணம் செய்து கொள்ளலாம். இன்னும் எதை வேண்டுமானாலும் செய்யலாமே' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

அந்த இன்ப உணர்ச்சியுடனே, மிகுந்த உற்சாகமாக, நிறைந்த மனத்துடன் வீட்டுக்கு வந்தான்.

•• •• ••

அன்று முழுவதும் இனியனுக்கு ஒன்றும் ஓடவில்லை. தன் வாழ்வில் கிடைக்க முடியாதது கிடைத்து விட்டதாக எண்ணினான். மேலும் அவனுக்கு ஏதோ ஒன்று கிடைக்கப் போவதாக அவன் ஆவலுடன் எதிர்பார்த்தான்.

இரவில் இனியன் படுக்கையில் படுத்த வண்ணம் படித்துக் கொண்டிருந்தான். படிப்பில் அவன் கவனம் செல்லவில்லை. காலையில் இருந்து நிகழ்ந்த ஒவ்வொரு சம்பவங்களும் அவனுக்கு ஒன்றன் பின் ஒன்றாக நினைவுக்கு வந்தவண்ணமிருந்தன. அதையே நினைத்துக் கொண்டிருந்தான். அப்படியே கண்ணயர்ந்து போனான்.

திடீர் என்று அவன் முன் தேன்மொழி வந்து தோன்றினாள். வந்ததும் அறையின் மூலை முடுக்கு எல்லாம் சுத்தம் செய்தாள். ஒரு குடும்பப் பெண்ணுக்கு வேண்டிய திறமை முழுவதும் அவள் ஒவ்வொரு செயலிலும் நன்றாகத் தெரிந்தது.

அவள் ஓடி ஆடி வேலை செய்ததால் முகத்தில் வியர்வை அரும்பிக் கன்னத்தின் வழியாக முத்து முத்தாக விழுந்தன. வேலை செய்வதைச் சற்று நிறுத்திவிட்டு அவசரம் அவசரமாக வியர்வையைத் துடைத்துக் கொண்டாள். அவள் வனப்பு மிகுந்த உடலிலும், அழகிய கைகளிலும் ஒரே தூசியாக இருந்தது. அப்படித் தூசிபடிய வேலை செய்வதில்தான் இன்பத்தைச் சுவைத்து அவளால் அனுபவிக்க முடிந்தது.

தான் பண்ணையார் வீட்டு எஜமானி என்பதைத் தெரிந்தும், தன் ஆடம்பர அலங்காரங்கள் எல்லாவற்றையும் மறந்து, மாசு மறுவற்ற அழகுடன் விளங்கும் மெல்லிய மணி விரல்களால் அவள் சில்லறை வேலைகளைச் செவ்வையாகச் செய்யும் பணியில் ஈடுபட்டு மகிழ்ந்தாள்.

பிறகுதான் அவள் இனியனை நோக்கி வந்தாள். அழகு நிறைந்த தேன்மொழி என்றைக்குமில்லாத விதத்தில் மிகுந்த குதூகலத்துடன் பேசிக் கொண்டிருந்தாள். திடீர் என்று அங்கு மாட்டியிருந்த தன் அன்னையின் புகைப் படத்தைப் பார்த்தான் இனியன். உடனே தேன் மொழியைத் திரும்பிப் பார்த்தான். அவள் அவனைப்பார்த்துச் சிரித்தாள். அப்போது என்னவோ அவன் மனத்தில் ஒரு மாறுதல் ஏற்படுவதை உணர்ந்தான். படத்தில் இருந்த அன்னை மௌனமாக இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருப்பது போலிருந்தது அவனுக்கு. 'எப்படி இந்தப் பெண்ணோடு இவ்வளவு சுமுகமாகப் பழக முடிகிறது! சந்தோஷமாகச் சிரித்துப் பேச முடிகிறது!' என்று அன்னை நினைப்பது போலிருந்தது அவனுக்கு. அன்னை தன்னையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருப்பதாக உணர்ந்தான்.

அதனால் அவன் தன் உணர்ச்சியைக் காட்டாமல் மிகவும் ஜாக்கிரதையாக இருந்தான். தேன்மொழி தாவி ஓடி வந்து அவன் படுக்கையில் அமர்ந்தாள். அவன் சட்டென்று படுக்கையை விட்டு எழுந்தான். தேன்மொழி அந்தப் படுக்கையில் படுத்துக் கொண்டாள். அவன் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை எடுத்துப் புரட்டினாள். இந்தக் காட்சியை இனியன் சற்றுத் தூரத்தில் இருந்தபடி பார்த்துக் கொண்டிருந்தான்.

தேன்மொழி இனியனின் படுக்கையில் படுத்திருக்கிறாள். உதட்டில் புன்னகை நெளிகிறது. தலை தலையணைக்குள் அழுந்திக் கிடக்கிறது. தலைமயிருக்கு இடையில் ஒரு கை மறைந்து இருக்கிறது. இன்னொரு கையில் புஸ்தகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் கூந்தல் அவிழ்ந்து விட்டது. அவள் புத்தகத்தை மூடிவைத்து விட்டு இனியனைப் பார்க்கிறாள். மீண்டும் புத்தகத்தைப் புரட்டுகிறாள். கருப்புப் பட்டைப்போல் பளபளவென்று மின்னும் அற்புதக் கூந்தல் காற்றிலே அசைகிறது. அலை அலையாக அவள் கழுத்திலும், வனப்பு மிக்க தோளிலும், எடுப்பான மார்பிலும்





பிப்ரவரி எட்டாந் தேதி தென்காசிக்கு வடமேற்கே சுமார் இருபது மைல் தூரத்தில் உள்ள அச்சன் கோயில் ஐயப்ப சாமிக்குக் கும்பாபிஷேகம் நடந்தது. குன்றக்குடி அடிகளார், ஜில்லா முனிசீபு திரு பி. எஸ். சோமசுந்தரம் பிள்ளை, திரு பி. டி. ராஜன் எம். எல். ஏ., மேடைதளவாய் திரு குமாரசாமி முதலியார் ஆகியவர்கள் கும்பாபிஷேக வைபவத்தில் கலந்து கொண்டு நடத்தி வைத்தனர்.

---

அது ஆடித் தவழ்கிறது. கள்ளங் கபடற்ற குழந்தையின் தன்மையும், கவர்ச்சி மிகுந்த அழகும் நிறைந்த அவள் முகம்; அதில் மின்னும் நட்சத்திரம் போன்ற கண்கள்; அவைகள் ஒரு இடத்தில் இல்லாமல் சுற்றிச் சுழன்று கொண்டே இருக்கிற கோலம் எல்லாவற்றையும் பார்த்து அனுபவித்தான் இனியன். அவள் கண் இமைகள் படபட வென்று ஆடித் துடிக்கின்றன. மிருதுவாக மூச்சு விடும்போது அவள் மார்பகம் உயர்ந்து தாழ்ந்தது. எல்லாமாக ஒரு கலைஞனின் கலாரஸனையும், கலை ராணியின் காம்பீர்யமும், லளிதபாவமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற பொற்சிற்பம்போல தேன்மொழி தோன்றினாள். அவள் அவயவங்களின் அற்புத வடிவமும், வனப்பும், எழிலும் இனியனின் இதயத்தில் காதல் முரசு கொட்டுவது போலிருந்தது.

தேன்மொழியின் புற அழகைப் போலவே அவள் அக அழகும் கவர்ச்சிகரமாக, பரிசுத்தமாக இருந்தது. அதனால்தான் இனியன் அவளுக்கு அடிமையானான்.

இனியன் தேன்மொழி படுத்திருந்த அந்தக் கட்டிலைப் பார்த்தான். சாதியின் பெயரால் தாழ்த்தப் பட்டவளாகக் கிடந்தவளைத் தன் மனைவியாக்கி, லளித குமாரியாக, எழிலரசியாக, தன் இதய ராணியாக வைத்துக் கொண்டதை நினைத்துத் தன்னைத்தானே பாராட்டிக் கொண்டான். தன்னுடைய படுக்கை யறை தேன்மொழியின் வருகையால், அவள் கைப் பட்டவுடன் அற்புதமாக ஒளிபெற்று விளங்குவதை எண்ணி மகிழ்ந்தான்.

அவன் உள்ளத்திலே காதல் குமுறுகிறது. அன்பு உணர்ச்சியால் அவன் அவதியுற்றான். சற்று நேரத்தில் தன்னை மறந்தான். தேன்மொழியை அடக்க முடியாத ஆசையுடன் பார்த்தான். அவளிடம் செல்ல வேண்டும் என்று ஒரு தவிர்க்க முடியாத தாபம் ஏற்பட்டது. அவளை நோக்கிச் சென்றான். அவள் படுக்கையிலிருந்து ஒரு துள்ளுத் துள்ளி இறங்கி அறையின் ஜன்னல் ஓரமாக நின்று வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். நூதனமான ஒரு உள்ளக் கிளர்ச்சியுடனும், விவரிக்க முடியாத இன்ப உணர்ச்சியுடனும் இனியன் தேன்மொழிக்குப் பின்னால் போய் அவள் அருகே நின்றான். மெதுவாக அவள் தோளைத் தொட்டான். அவள் ஆசையோடு அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவள் கண்கள் சிரித்தன. அவள் உதடுகள் புன்னகை புரிந்தன. தன்னை மறந்து ஆனந்த பரவச நிலையில் அவள் நின்றாள்.

"தேன்மொழி" என்றான் இனியன்.

"அன்பரே!" என்றாள் தேன்மொழி.

அடுத்த கணம் தேன்மொழியின் மலர்க் கரங்கள் இனியனின் கையைப் பற்றியது.

"இனியா!" என்று அவன் தந்தை கோபமாகக் கூப்பிடும் சத்தம் கேட்டது.

இனியன் திடுக்கிட்டு எழுந்தான். இதுவரையில் அவன் கண்டு வந்த இனிய கனவு கலைந்து மறைந்து விட்டது. அவன் தந்தை கோபாவேசமாக அங்கு நின்று கொண்டிருந்தார். அவர் கோபமும் வெறுப்பும் நிறைந்த முகத்தை இனியனால் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை.

"நான் கேள்விப்பட்டதெல்லாம் உண்மைதானா!" என்று இடி முழக்கக் குரலில் கேட்டார்.

இனியன் பதில் சொல்லாமல் மௌனமாக நின்று கொண்டிருந்தான்.

தன் இரு கைகளையும் ஒன்றாகச் சேர்த்துப் பிசைந்து கொண்டும், பற்களைக் கடித்துக் கொண்டும் அவர் மேலும் பேசினார்:

"நம் குடும்ப கௌரவத்தைக் குலைத்து நாசமாக்கி விடுவதற்கு வழி செய்திருப்பதாகக் கேள்விப் பட்டேன், அது உண்மையா!"

இனியன் மௌனமாகத் தலையை ஆட்டினான். அதில் மரியாதையும் பண்பும் கலந்த பாவத்




சென்னை — எழும்பூரில் பல அன்பர்களின் ஆதரவைக் கொண்டு சிரத்தையோடு நடத்தப்பட்டு வரும் ஸ்ரீ வேத சபையின் மூன்றாவது ஆண்டு விழா சென்ற பிப்ரவரி மாதம் ஸர் எஸ். வரதாச்சாரியார் அவர்களின் தலைமையில், மிகவும் சிறப்பாக நடந்தேறியது. ஸ்ரீ திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் மேற்படி ஆண்டு விழாவைத் துவக்கி வைத்தார்கள். விழா ஐந்து நாட்கள் அமோகமாக நடந்தது. ஏராளமான ஆஸ்திக அன்பர்கள் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.

---

துடன் 'ஆமாம்' என்று அவன் அழுத்தமாகச் சொல்லுவது போலத் தெரிந்தது.

"இன்னொரு விஷயம்" என்று தந்தை குமுறிக் கொண்டே பேச ஆரம்பித்தார்:

"நீ தேன் மொழியிடம் 'நீ இல்லா விட்டால் என்னால் வாழ முடியாது' என்று சொன்னாயாம். அவள் அப்பனும் அதற்குச் சம்மதித்து விட்டானும். இதெல்லாம் என்ன நாடகமா!"

இனியன் குரலைச் சற்றுத் தாழ்த்திக் கொண்டு தன் தந்தையின் முகத்தை நேருக்கு நேர் பார்த்து நிதானமாகப் பேசினான்:

"ஆமாம். உண்மைதான் அப்பா!"

இந்த வார்த்தைகள் தந்தையின் செவியில் இனியனின் அசைக்க முடியாத மன உறுதியை எடுத்துச் சொல்வது போல் 'டணார்' என்று விழுந்தன. அவருக்குக் கோபம் வந்து விட்டது. உதடுகள் துடித்தன. கண்களில் கோபக் கனல் பொங்கித் ததும்பியது. முகத்திலிருந்த சுருக்கங்கள் புடைத்துக் கொண்டு நின்றன. 'சட்' டென்று அங்கிருந்து கிளம்பி விட்டார்.

இனியன் படுக்கையில் உட்கார்ந்து விம்மத் தொடங்கினான். வெட வெடவென்று ஆடிக் கொண்டிருந்த முழங்கால்களின் இடுக்கில் முகத்தைப் புதைத்துக் கொண்டான். விம்மி அழுததால் அவன் உயர்ந்த தோள்கள் குலுங்கின.

சாதி பெரிதா! பணம் பெரிதா! அன்பு பெரிதா! என்ற கேள்விகளுக்கு இரண்டு உள்ளங்கள் வழி தேடிக் கொண்டிருந்தன.

** ** **

அன்று மூற் பகல் சற்று உஷ்ணமாகவே இருந்தது. பசும்புல் செழித்து வளர்ந்த திறந்த வெளியில், ஆங்காங்கு பெயர் தெரியாத மலர்ச் செடிகள் பலப் பல வர்ணங்களில் கொத்துக் கொத்தாக மலர்ந்து கண்ணுக்குக் குளிர்ச்சியாகக் காட்சி அளித்தன. தூரத்தில் எங்கோ இரண்டு மூன்று குருவிகள் சோக கீதத்தை எதிரொலிப்பதுபோல நீண்ட குரல் எழுப்பி ஓல மிட்டன.

அப்பொழுது சுந்தரி தன் கல்லூரித் தோழனை மாணிக்கத்தைத் தேடிப் புறப்பட்டாள். அன்று அவள் மாணிக்கத்திடம் ஏதோ முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேசவேண்டும் என்று எண்ணிக் கொண்டே சென்றாள்.

பாதையில் ஒரு திருப்பம். அங்கு பலமாதிரிச் செடிகள் முளைத்து அடர்ந்திருந்தன. சுந்தரி அங்கு நின்று சிறிது யோசித்தாள். சாலை வழியாகச் செல்வதென்றால் பலர் கண்ணில் படவேண்டியிருக்கும். எல்லாரும் 'ஏன் நடந்து செல்கிறாய்!' என்று கேட்பார்கள். குறுக்கு வழியே சென்றால் யார் கண்ணிலும் படாமல் சென்று விடலாம்.

அங்கிருந்த ஒற்றையடிப் பாதை வழியாக வேகமாக நடக்க ஆரம்பித்தாள். சற்றுத் தூரம் சென்றதும் குறுக்கே முள்வேலி போட்டிருப்பதைப் பார்த்தாள். சிறிது சிரமப்பட்டால் ஏறி அப்பால் குதித்து விடலாம். ஆனால் அந்த முள் கம்பியில் புடவை சிக்கிக் கொண்டது. நல்ல காலம் புடவை கிழியாமல் அந்தப் பக்கம் குதித்தாள். காலில் இருந்த செருப்புக் கழன்று விழுந்து விட்டது. அதைக் குனிந்து எடுத்துக் காலில் போட்டுக் கொண்டு மேலே நடக்கத் திரும்பினாள்.

திரும்பியதுதான் தாமதம்! அவள் பக்கத்தில் சிறிது தூரத்தில் மாணிக்கம் நின்று கொண்டிருந்தான். அவன் ஒருமாதிரி சுந்தரியைப் பார்த்துக் 'கலகல'வென்று சிரித்தான்.

"என்ன! என்னைத் தேடிக் கொண்டுதான் புறப்பட்டாயோ!" என்றான்.

சுந்தரியின் அழகிய முகம் சிவந்தது.

## தமிழ் நாட்டின் முன்னேற்றம்

தமிழ் நாட்டின் பிற்போக்கான நிலை, வட நாட்டுக்கு வந்த பிறகுதான் நமக்குத் தெரிகிறது. தமிழ் நாட்டில் தொழிற்சாலைகள் மிகக் குறைவு. விவசாயத்திலும் நாம் மிகவும் முன்னேறி விட வில்லை. தமிழ் நாட்டிலோ பலவித தொழிற் சாலைகள் ஏற்படுத்துவதற்கு வேண்டிய சாதனங்கள் நிறைய உள்ளன. கைத் தொழிலி லும் பல துறைகளிலும் முன்னேற்றத்துக்கு வழிகள் இருக்கின்றன. ஆனால், இதையெல்லாம் சர்க்கார் கவனித்ததாகவே தெரிய வில்லை. இதனால் தான் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் முதலிய கொடுமைகள் தலை யெடுக்கின்றன. திருவிதாங் கூர் கொச்சி சமஸ்தானத்தில் கூடக் காங்கிரஸ் தோற்றதற்கு வறுமையும் வேலை யில்லாத் திண் டாட்டமும் முக்கிய காரணங்களாகும்.

புதிதாக எஃகுத் தொழிற் சாலையை எங்கு நிறுவ வேண்டு மென்று பல மாகாணங்கள் சண்டைப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. இதி லெல்லாம் நம் சென்னை மாகாணம் கவனமே செலுத்தாதது வருந்தத் தக்க விஷயம். 1949-ல் சில நிபுணர்கள், சேலத்தில் எஃகுத் தொழிற்சாலை ஏற்படுத்தலா மென்றும், அதற்கு வேண்டிய மற்ற சாதனங்களைப் பற்றியும் ஒரு அறிக்கை வெளியிட்டார்கள். உயர்தர நிலக்கரி இல்லா விட்டாலும், மட்ட ரக நிலக்கரியாலும் மின்சா ரத்தாலும் இயங்கக் கூடிய இரும்பு எஃகு ஆலைகள் ஜெர்மனியிலும் ஸ்வீடனிலும் இருந்து வருகின்றன. குறைந்த அளவில் அடுப்புக்கரியை உட்கொண்டு மின்சாரத்தால் இயங்கும் இரும்பு ஆலைகள் பத்ராவதியில் உள்ளன. இவைகளைப் போல் சென்னை மாகாணத்திலும் பல நிறுவலாம். நெய்வேலியில் கிடைக்கும் நிலக்கரியைக் கொண்டு உலோகத் தொழிற்சாலைகளும் மற்றும் தார், மெழுகு, முதலிய பல பொருள்களும் உண்டாக்க லாம். மேலும், பித்தளை, வெண்கலம், அலுமினி யம் முதலிய உலோகத் தொழிற்சாலைகள் ஏற் படுத்துவதில் கஷ்டமொன்று மில்லை. இவை களுக்கு நிலக்கரியே தேவையில்லை. மின்சாரத் தின் உதவியால் உலோகங்களை உருக்கிப் பலவித முறைகளால் பலவித சாமான்கள் செய்யலாம்.

கைத்தொழில் முன்னேற்றத்திற்கும் பல வழிகள் இருக்கின்றன. ஆணிகள் செய்தல், அலுமினி யத்தில் வர்ணம் ஏற்றி மெருகு செய்தல், பித்தளை, அலுமினியம் பாத்திரங்கள் செய்தல், இன்னும் பேனா நிப்புகள், க்ஷவர பிளேடுகள் முதலியன குடிசைத் தொழில்களாகவே செய்யப்படுகின்றன.

சென்னை மாகாணத்தின் முன்னேற்றம், கைத் தொழில்களிலும் ஆக்கத் தொழில்களிலும்தான் உள்ளது. இவைகளை அலட்சியம் செய்தால் மக்கள் வறுமை அகல வழியே இல்லை.

கட்னி
6—3—54

என். வி. ரமணி

---

"அதெல்லாம் இல்லை" என்றாள்.

"நீ சொல்லுவது பொய்; முழுப் பொய். அது உனக்கே நன்றாகத் தெரியும்!"

"அதற்கேன் இப்படிக் கத்துகிறாய்!"

இப்பொழுதும் சுந்தரி துணிந்து பொய் சொன் னாள். உண்மையில் மாணிக்கம் கத்தவே இல்லை. மெதுவான குரலில்தான் சொன்னான்.

"என்னால் உன்னைப் பார்க்காமல் ஒருநாள்கூட இருக்க முடியவில்லை. அதை நீ நம்பத்தான் வேண்டும்" என்றான் மாணிக்கம்.

அவர்கள் பேசிக் கொண்டே நடந்தார்கள். எப்படி எப்படியோ நடந்து கடைசியில் கடற் கரைக்கு வந்து சேர்ந்தார்கள்.

கடல் "ஹோ" "ஹோ" என்று சப்த அலை களால் மோதிக் கொண்டே இருந்தது.

சுந்தரி பொங்கிப் பொங்கி வரும் கடல் அலை களைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

மாணிக்கம் அவள் எதிரில் அமர்ந்தான். சுந்தரி பக்கத்தில் சுகந்த வாசனை தவழ்ந்தது. அந்த வாசனையை அனுபவித்த வண்ணம் மாணிக்கம் சுந்தரியை நோக்கினான். ரோஜா மலர் போன்ற அவள் முகம் சத்தியத்துக்கு இருப்பிடம் போல அவனுக்குத் தோன்றியது. கோயில் சிற்பங்களில் காணும் தெய்வப் பெண்களின் அழகிய திரு உருவங்கள் அவன் நினைவுக்கு வந்தன. அவள் கண் களைப் பார்த்தான். அவள் கருவிழிகள் அவன் பார்க்கும் போதெல்லாம் இன்னும் கருமையாகி அவனால் புரிந்து கொள்ள முடியாதபடி எங்கோ தூரத்தில் நோக்கின. அவள் அவனைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருந்தாளோ என் னவோ! ஆனால் மாணிக்கம் மனத்தில் தோன்றி யுள்ள ஒரு புது உணர்ச்சியை அவனால் நன்றாக உணர்ந்து கொள்ள முடிந்தது.

அன்பு, உணர்ச்சி என்பவற்றின் அர்த்தத்தை, அதன் சக்தியை, அதன் வேகத்தை அவன் சில நாட்களாக அறிந்துகொண்டு வந்தான். சுந்தரியின் கண்களில் இருந்து பாய்ந்து வீசிய ஒளி ரேகையில் அவன் உயிர் இழுக்கப் படுவதை உணர்ந்தான். அதிலே, அதன் சுகத்திலே, ஒரு பயம் சூழ்ந்து இருப்பதையும் உணர்ந்தான்.

சுந்தரி ஆச்சரியம் அடைந்தவள் போலப் புரு வத்தைச் சற்று உயர்த்தினாள். மாணிக்கத்தைச் 'சட்'டென்று திரும்பிப் பார்த்தாள்.

மாணிக்கத்திடம் அவள் என்ன பேசவேண்டும் என்று எண்ணிக் கொண்டு வந்தாளோ அதை யெல்லாம் எப்படி ஆரம்பிப்பது என்று தெரி யாமல் தவித்தாள்.

மாணிக்கம் இருந்தாற்போல் இருந்து நிமிர்ந்து உட்கார்ந்தான். "ப்பூ" என்று உதட்டைப் பிதுக்கி அலுத்துக் கொண்டான்.

"என்ன!" என்றாள் சுந்தரி.

"இந்தக் கடல் தண்ணீர் இவ்வளவு இருந்தும் இதை ஆசை தீரக் குடிக்க முடியுமா!" என்றான்.

"உலகத்தில் உபயோகமில்லாத சரக்குக்குக் குறைச்சல் இல்லை. வேலைவெட்டி இல்லாமல் எத்தனை வாலிபர்கள் பெற்றோர்கள் சம்பாதித்து வைத்த பணத்தைச் செலவு செய்துகொண்டு சுற்றிச் சுற்றி வருகிறார்கள். அட கடவுளே! இப்படி எத்தனை வாலிபர்கள். அவர்களால் யாருக் காவது புண்ணிய முண்டா!" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் சுந்தரி. அப்பொழுது அடித்த காற்றால் தலைமயிர் அவள் முகத்தை மறைத்தது. அதை ஒதுக்கிக் கொண்டாள்.

அவளது தலைமயிர் நீளமாக இருந்தது. கருமை யாக அடர்த்தியாக அலை அலையாக இருந்தது.

"எல்லா வாலிபர்களையும் அப்படிச் சொல்ல முடியுமா? ஏன், நம் இனியனையே எடுத்துக் கொள்வோமே" என்றான் மாணிக்கம்.

"இனியன். அவர் மனிதர்களுக் கெல்லாம் மேலானவர். அவரைப் பொதுப்படையாக எல்லா

# அன்றுடம் இரண்டே நிமிஷங்கள் தேவை நீங்கள் பூரண எழிலுடன் திகழலாம்

பிரதி இரவிலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் சருமத்தில் தடவி நன்கு தேயுங்கள் — ஒரே ஒரு நிமிஷம் தான் ஆகும். அதிலுள்ள எண்ணெகள் சருமத்தில் ஊடுருவிச் சென்று, மயிர்க் கால்களில் படிந்திருக்கும் சிறு சிறு தூசியையும் அழுக்கையும் வெளியேற்றி விடுகிறது. சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது எவ்வளவு பரிசுத்தமாக விளங்குகிறதென்பதைப் பாருங்கள்.



இவ்வற்புத க்ரீமை இன்னும் கொஞ்சம் எடுத்து முகத்திலும் கழுத்திலும் பூசிக் கொள்ளுங்கள். இரவு முழுவதும் அது அப்படியே இருக்கட்டும். காலையில் எழுந்தவுடன் உங்கள் மேனி மிக துல்லியமாயும் பூரண பொலிவுடனும் விளங்குவதைக் கண்டு அதிசயிப்பீர்கள்.

முக சிங்காரிப்புக்குந்தான், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவிக்கொண்டால் அதன் மேல் பௌடர் பூசுவது மிக எளிது — அழகாயுமிருக்கும். ஞாபகமிருக்கட்டும்.






பிரதிதினம் காலையிலும் ஒரு நிமிஷம் உங்கள் முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மெதுவாகத் தடவுங்கள். அது பூரணமாக மறைந்து விடும். சருமம் பட்டுப்போன்று மழமழப்பாகவும் அற்புத சோபையுடனும் விளங்கும்.

கண்ணுக்குப் புலப்படாத வகையில் முகத்தில் மறைந்துள்ள இந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம திரைப்படலம் பகல் முழுவதிலும் உங்கள் எழிலைப் பாதுகாக்கும். உங்கள் மிருதுவான சருமத்திற்கு இந்த பாதுகாப்பு அவசியம்—முக்கியமாக வரட்சைக் காற்றிலும் சூரிய கிரணங்களின் வெப்பத்தாலும் சருமம் துவண்டு போகாமல் காப்பாற்றி வர அத்யாவசியம்.

உங்கள் சருமத்திற்கு இவ்விரட்டை பராமரிப்பு ஒவ்வொரு நாளும் தேவை. பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையும் அன்றுடம் தவறாமல் உபயோகித்து உங்கள் அழகிற்கு அழகு ஊட்டுங்கள்!



உலகில் எங்குமே பெண்மணிகள் தங்கள் எழிலை புதுமை குன்றாமல் பாதுகாக்க பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையுமே உபயோகிக்கின்றனர். அவர்கள் இயற்கை அழகின் இரகசியம் அதுதான்

**பாண்ட்ஸ்**

P. 8513

கூடனும் சேர்த்துப் பேசக்கூடாது. அவருடைய உபதேசத்தால் நானே எவ்வளவோ விதத்தில் மாறிப் போய் விட்டேன்."

"நானே என்று இழுத்தால் என்ன அர்த்தம்."

"நான் அப்படி வெறும் ஜடமாக இருந்தேன். அதை இப்பொழுது சொல்லிக் கொள்வதில் கொஞ்சம்கூட வெட்கப்படவே இல்லை."

"நீ மட்டும்தானா! நான் கூடத்தான். இப்பொழுதெல்லாம் என்னுடைய மனத்தில் மட்டமான எண்ணங்கள் தோன்றுவதே இல்லை."

"ஒரு காலத்திலே எனக்கு ஓர் எண்ணம் இருந்தது. விதம் விதமான உடைகளை அணிந்து கொண்டு உல்லாசமாகச் சினிமா, நாடகம், 'கிளப்' என்று சுற்றுவதுதான் பெருமை என்று எண்ணியிருந்தேன். அந்த எண்ணம் இப்போது அடியோடு மாறி விட்டது. எல்லாம் இனியனின் அருமையான உபதேசத்தால்தான்."

அடாடா! ஒழுக்கம் நிறைந்த ஒரு வாலிபனின் கூட்டுறவால் இப்படி உயர்ந்த முறையில் வாலிபர்களின் மனம் மாறி விடுகிறது. அப்படிப்பட்ட வாலிபர்கள் பலர் தங்கிப் படிக்கும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் முதலியவைகளில் அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் உபாத்தியாயர்கள் இனியனைப் போல் நடந்து கொண்டால் வாலிப உலகமே மாறிவிடுமே. இதை அவர்கள் என்று உணர்ந்து கொள்ளப் போகிறார்களோ! உபாத்தியாயர் தொழில் மிகப் பொறுப்பு வாய்ந்த தொழில். அவர்களை நம்பி நம் தேசத்தின் எதிர்காலச் செல்வங்களை, அதாவது சின்னஞ் சிறு குழந்தைகளை, வாலிபர்களை ஒப்படைத்திருக்கிறோம். அந்த வாலிபர்கள்தான் எதிர்காலத்தில் இந்த நாட்டை உருவாக்கப் போகிறவர்கள். அவர்களை நல்வழிப் படுத்த வேண்டியது நம் கடமை என்று பேராசிரியர்களும், உபாத்தியாயர்களும் உணர்ந்து கொள்வார்களா!

மாணிக்கம் சுந்தரியின் முகத்தைப் பார்த்தான். இனியனைப் பற்றிச் சொல்லும்போது அவள் முகத்தில் தோன்றிய மரியாதை உணர்ச்சிகளைக் கவனித்தான். தொடர்ந்து பேசினான்:

"இனியனின் குணத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாத சில இளம் பெண்கள் அவன் அழகைப் பற்றித்தான் பிரமாதமாகப் புகழ்ந்து பேசக் கேட்டிருக்கிறேன்."

"இளம் பெண்களுக்கு இனியனைப் பற்றி என்ன தெரியும்! என்னைக் கேளு!"

"நீ என்ன இளம் பெண்ணா!"

சுந்தரி அவனைப் பார்த்துக் குறும்புத்தனமாகச் சிரித்தாள். பிறகு சிரிப்பை மாற்றிக் கொண்டு அவனிடம் மனம்விட்டுப் பேசினாள்:

"ஒரு காலத்தில் நான் கல்யாணமே செய்து கொள்ளக் கூடாது, ஆண்களே மோசமானவர்கள் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இன்னும் ஆண்கள் பெண்களைத் தங்கள் அடிமைகளாகத்தான் நடத்துவார்கள். அவர்கள் மனத்தில் இரக்கமே இருக்காது என்றெல்லாம் கூட நினைத்துக் கொண்டிருந்தேன்."

"புத்திக் குறைவால் சில பெண் பிள்ளைகள் அப்படிச் சிந்திப்பதும் உண்டு."

"அப்படியெல்லாம் அசட்டுத்தனமாக ஒன்றும் சொல்லாதே!" என்று முகத்தைச் சுளித்துத் திருப்பிக்கொண்டே கண்டித்தாள் சுந்தரி.

மாணிக்கம் அடங்கிப் போனான்; வாயை மூடிக் கொண்டு பேசாதிருந்தான்.

இருவரும் சற்று நேரம் மௌனமாகவே உட்கார்ந்திருந்தனர். அவர்கள் மௌனத்துக்கு உயிர் கொடுப்பது போல கடல் 'ஓம்' 'ஓம்' என்று ஒலித்து அலை மோதிக் கொண்டிருந்தது.

"இனியனிடமிருந்து எனக்கு ஒரு கடிதமும் வரவில்லை. உனக்கு ஏதாவது கடிதம் வந்திருக்கிறதா!" என்று சுந்தரியைப் பார்த்துக் கேட்டான் மாணிக்கம்.

"இல்லை" என்று தலையை அசைத்தாள்.

"இனியன் மனத்தைக் கவர்ந்த மங்கை ஒருத்தி அவன் கிராமத்தில் இருப்பதாக என்னிடம் ஒரு தரம் சொல்லியிருந்தான்" என்றான் மாணிக்கம்.

இதைக் கேட்டவுடன் சுந்தரி திடுக்கிட்டாள். அந்த வார்த்தைகள் அவள் காதில் புகுந்து உடல் முழுதும் மின்னல் வேகத்தில் பரவியது. அவள் உடலில் ஒவ்வொரு அவயவமும் துடிதுடிப்பதை அறிந்தாள். அவைகள் ஏன் அப்படித் துடிக்கின்றன, அதை அவளால் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. தன் உள்ள உணர்ச்சிகளை மாணிக்கம் தெரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று மிகவும் சிரமப்பட்டு முகத்தை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்ள முயன்றாள். மாணிக்கத்துக்கு ஏதாவது பதில் சொல்ல வேண்டுமே என்பதற்காகச் சொன்னாள்:

"ஆமாம். இனியனைக் கணவனாகப் பெறும் மங்கை யாராயிருந்தாலும் அவள் பாக்கியம் பெற்றவள்தான்" என்று கூறினாள். கடலைப் பார்த்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

அவர்களுக்கு முன்னால் கடல் பரந்து கிடந்தது; மாலை நேரத்தின் மங்கிய ஒளியில் வர்ணிக்க முடியாத அழகு பெற்று விளங்கியது. சிறியதும் பெரியதுமான அலைகள் கரையில் ஒன்றன் பின் ஒன்றாக ஓடிவந்து மோதின.

சுந்தரியின் உள்ளத்திலும் பலப் பல எண்ண அலைகள் தோன்றி அவள் மிருதுவான இதயத்தில் மோதின. அவள் நெஞ்சை வலிக்க ஆரம்பித்து விட்டது. அவளால் அந்த வேதனையைத் தாங்கிக் கொண்டு அங்கு உட்கார்ந்திருக்க முடியவில்லை. மாணிக்கத்திடம் அதற்குமேல் தொடர்ந்து பேசிக் கொண்டு உட்கார்ந்திருக்கவும் விரும்பவில்லை. சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தாள்.

"நான் அவசரமாக வீட்டுக்குப் போக வேண்டும். நாளைக்கு நாம் சந்திப்போம். நீ அவசியம் வரவேண்டும்" என்று மாணிக்கத்தைப் பார்த்துச் சொல்லி விட்டுச் சுந்தரி போய் விட்டாள்.

மாணிக்கம் ரிக்ஷாவில் ஏறிக் கொண்டு கிளம்பினான். அவன் சென்ற தெருவில் அவனையும் ரிக்ஷாக்காரனையும் தவிர வேறு ஒருவரையும் காணவில்லை. ரிக்ஷாக்காரன் ரிக்ஷாவை இழுத்துக்கொண்டு ஓடிக் கொண்டிருந்தான். மாணிக்கம் ரிக்ஷாவில் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். ரிக்ஷாக்காரன் மனத்தில் என்ன நினைவுகள் ஓடினவோ! ஆனால் மாணிக்கத்தின் மனத்தில்! அந்தத் தெருவின் இருபுறங்களிலும் உள்ள வீடுகளில் வாழும் மனிதர்கள் தங்கள் இன்ப எண்ணங்களுடனும் ஆசைக் கனவுகளுடனும் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் அல்லவா! மாணிக்கம் சுந்தரியை நினைத்தான். நீண்டு கிடக்கும் தார் போட்ட சாலையைப் பார்த்தான். அந்தச் சாலையின் கனவுகளை அவனால் அறிய முடியுமா! அவன் எண்ணங்களைப்பற்றி யாராவது சுந்தரியிடம் எடுத்துச் சொல்லுவார்களா!

ரிக்ஷாவை அந்த முடிவற்ற நீண்ட சாலையில் இழுத்துக் கொண்டு ரிக்ஷாக்காரன் ஓடினான். மாணிக்கத்தின் மனத்தில் ஏதோ ஒரு வேதனை புகுந்து கொண்டு சோக கீதம் இசைத்தது. அதை அவனால் தாங்க முடியவில்லை. (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.







# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான அழுக்கிலிருக்கும் கிருமி களிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது.







இந்தியாவில் தயாரித்தது.

L. 246-50 TM

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in ceylon*

# நாள் முழுவதும்

காலை வேளையில்





# புத்துணர்ச்சி

பிற்பகலில்





# அளிக்க...

இரவில்








குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.



HBP. 10-50 TM